REGISTERED No. M. 1500.

# நவசக்தி

## NAVASAKTI

(தமிழ் வாரப் பதிப்பு)

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.



"வீடு பெறநில்" "மாற்றானுக் கிடங்கொடேல்" "ஏற்பதிகழ்ச்சி"

சிலம்பு 2. துந்துபிஸு ஆவணிமீ உ௨ (18—8—22) பரல் 41

# எத்தகைய கல்வி பெண்களுக்குப் போதிக்கப்படவேண்டும்?

சின்னாட்களுக்குமுன் சென்னைச் செனெட் மண்டபத்தில் பெண்களின் கூட்டமொன்று நடைபெற்றது. அதுகாலை, கல்வி மந்திரியார் அநுஷ்டிக்கப் போகும் ஆரம்ப இலவசக் கல்வி முறையில் பெண் மக்களும் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டுமென்பதைப் பற்றிப் பேசப்பட்டது. பெண்கள் உயர்ந்த கல்வியைப் பெற வேண்டுமென்பதை மறுப்போர் இக்காலத்தில் ஒருவரும் இருக்க மாட்டார் என்றே கருதுகிறேன். ஆதலின், செனெட்மண்டபத்தில் கூடிய கூட்டத்தினர் செய்த தீர்மானத்தை நடு நிலைமையுள்ள எவரும் ஆதரிப்பர் என்பதில் ஐயமில்லை; ஆனால் ஆண் மக்களுக்குக் கற்பிக்கப்படும் கல்வியையே பெண் மக்களுக்கும் கற்பித்தல் எவ்வித நற்பயனையும் உண்டாக்காது. பெண் மக்களுக்கு எத்தகைய கல்வி கொடுக்கப்படல் வேண்டுமென்பதின் சில அம்சங்களை மட்டும் ஈண்டுச் சுருக்கமாக எடுத்துக் காட்டுகிறேன்.

• • •

பெண்மக்கள் அமைப்பிலும், நடை உடை பாவனைகளிலும் ஆண் மக்களினின்றும் வேறுபட்டிருக்கிறார்கள். அவர்களுக்குக்கொடுக்கப்படும் கல்வியானது, அவர்களது அமைப்பிற்கும், பிற்கால வாழ்க்கைக்கும் ஏற்றாற்போலிருக்க வேண்டும். பெண்களின் தக மேன்மைக்குத் தகுந்தாற்போல் அவர்களுடைய அறிவும் அமைந்திருக்கிறது. விஷயங்களை விரைவில் கிரகிக்கும் ஆற்றல் அவர்களுக்கு உண்டு. ஆனால் கிரகித்த விஷயங்களை உடனேமறக்கும் சக்தியும் அவர்களிடத்தில் இருக்கிறதென்பது சிலருடைய அபிப்பிராயம். பொதுவாகவே, ஆண்மக்களின் அறிவைவிடப் பெண்மக்களின் அறிவு அதிகமாகப் பண்பட்டிருக்கிறது என்று சில அறிஞர் நினைக்கின்றனர். வீணான கவலைகளிலும் பயங்கரமான சம்பவங்களிலும் பெண்மக்களின் அறிவு சென்றால் அது கலக்கமடையும். ஆதலின் அவர்களுக்குக் கற்பிக்கப்படும் கல்வியானது, அமைதியுடைத்தாய்-ஆனால் அதிக மேன்மையுடையதாய் இருக்கவேண்டும்.

• • •

பெண்மக்கள், ஆண்மக்களுக்கு ஊழியம் செய்யவே பிறந்தார்கள் என்ற எண்ணம் உலகில் ஒழியவேண்டும். குழந்தைகளைப் பெறும் இயந்திரமாக அவர்களைக் கொள்ளல் அநாகரிக முடைத்தாம். ஆண்மக்களுக்குப் பெண்மக்கள் இன்றியமையாதவர்கள். பெண் மக்களுக்கு ஆண்மக்களின் உதவிவேண்டும். ஆதலின் இருதிறத்தாரும் சமமான நிலையில் இருந்து உலகவாழ்க்கையை நடத்த வேண்டுமென்ற எண்ணத்துடனேயே இருவரையும் ஆண்டவன் சம்பந்தப்படுத்தியிருக்கிறான். பெண் மக்களுக்கென்று தனியான உலகம் உண்டு; தனியான வாழ்க்கை உண்டு; தனியான நாகரிகம் உண்டு. ஆனால் அவர்களுடைய, உலகம், வாழ்க்கை, நாகரிகம் ஆகிய இவை, ஆண் மக்களின் உலகம், வாழ்க்கை, நாகரிகம் இவைகளோடு பிணைந்து நிற்கின்றன. இங்ஙனம் பிணைந்து நின்றாலன்றி இன்பமென்பது உலகத்தில் இராது. இந்த உண்மையை உணர்ந்து பெண்மக்களுக்குக் கல்வி போதிக்கப்பட வேண்டும்.

• • •

பண்டைக் காலத்துப் பெண் மக்கள் பெரிய கவிகளாக விளங்கினார்கள்; சிறந்த புலவர்களாயிருந்தார்கள்; யுத்த வீரர்களாகப் போற்றப்பட்டார்கள். வேதத்தின் சில பாகங்கள் பெண்மக்களால் பாடப்பட்டிருக்கின்றன. அரசியல் விவகாரங்களிலும் அவர்கள் தலையிட்டுழைத்தார்கள். வேத காலத்தில், பெண்மக்கள், ஆண்மக்களுக்குச் சமமாக எல்லாத் துறைகளிலும் விளங்கினார்கள். ஆனால் பெண்மக்களுக்கு ஆபரணங்களான, கற்பையாதல் வேறு பல நற்குணங்களையாதல் அவர்கள் இழந்து விடவில்லை. சம்பராசுரனோடு யுத்தம் செய்த தசரத மகாராஜனுக்கு உதவியாயிருந்த கைகேயி, தன் கணவனிடத்தில் நடந்து கொள்ள வேண்டிய முறையில் சிறிதும் பிறழ்ந்தாளில்லை. இதனால் விளங்குவதென்ன?

• • •

பெண்மக்களுக்குக் கற்றுக்கொடுக்கப்படும் கல்வியானது, அவர்கள் பிற்காலத்தில் உத்தமத் தாய்மார்களாகவும், சிறந்த மனைவிமார்களாகவும், உயர்ந்த சகோதரிகளாகவும் விளங்கும்படி இருத்தல் வேண்டும். அவர்கள் வீட்டிற்கு மட்டும் அல்லாது நாட்டிற்கும் நலஞ் செய்வோராய் இருக்கும்படி செய்ய வேண்டும். தங்கள் கற்பைக்காத்துக்கொள்ளவும் திறனற்றவர்களாய் இருக்கும்படி செய்யக்கூடாது. இத்தகைய கல்வியினாலேயே பெண்மக்களுக்கும்—அவர்களின் மூலமாக நாட்டிற்கும் நலன் உண்டாகும்.

• • •

சங்கீதம், தாய்மொழி, இந்திய தேச சரித்திரம் இவைகளில் நல்லபயிற்சி பெறும்படியாகப் பெண்மக்களைச் செய்ய வேண்டும். சங்கீதத்தின் பெருமை அளவிடற்குரியதன்று. இந்தச் சங்கீதம் இப்பொழுது பல விதமான இழிதுறைகளில் உபயோகிக்கப்படுகிறது. குடும்ப ஸ்திரீகளல்லாதாரே சங்கீதத்தில் நல்லபயிற்சி பெற்றிருக்கவேண்டும் என்ற எண்ணமும் இப்பொழுது பரவியிருக்கிறது. முற்காலத்தில் குடும்பஸ்திரீகள் சங்கீதத்திலும் பரத நாட்டியத்திலும் வல்லுநர்களாயிருந்தார்கள். இந்தக் காலத்திலுள்ள பெண்மணிகள் பலர் ஹார்மோனியப்பெட்டி இல்லாவிடின் பாடமுடியாதவர்களா யிருக்கிறார்கள். அந்தோ! பரிதாபம்! சங்கீதத்தில் கலைவாணியை வென்ற பெண்மக்களைப் பண்டைக் காலத்தில் கொண்டிருந்த நமது நாடு, இப்பொழுது ஹார்மோனியச் சனியனோடு போராடுகிறது. வீணை மறைந்து விட்டது; குழல் ஓடிப்போயிற்று; பரத நாட்டியத்தின் பேரே பலருக்குத் தெரியாது. இந்த நிலைமையில் சங்கீதத்தைப் பெண்மக்களிடையில் விருத்தி செய்யவேண்டும். பள்ளிக் கூடங்களில் இந்திய முறையில் சங்கீதத்தைப் பெண்மக்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். பக்தி ரசமான கீர்த்தனைகளையும், வீரச்சுவை ததும்பும்பாக்களையும் பெண்பிள்ளைகள் சங்கீத முறைப்படி பாடினால் எவ்வளவு இன்பமாயிருக்கும் என்பதை நான் கூற வேண்டுவதில்லை. இங்ஙனம் கற்றுக்கொடுக்கும் கீர்த்தனங்களின் பொருள்களை அவர்களுக்கு உணர்த்தி பிறகு பாடச் சொன்னாலன்றி நன்மை உண்டாகாது. பொருள் தெரியாமல் தற்காலத்துப் பெண்மக்களிற் சிலர் பாடுவதனால் அக்கீர்த்தனங்கள் உருக்குலைந்து எங்ஙனம் அல்லலுறுகின்றன என்பதை நான் கூறவேண்டுவதில்லை.

• • •

தாய் மொழிப் பயிற்சி பெண்களுக்கு இன்றியமையாதது. தாய் மொழியைச் செவ்வனே கற்றுக்கொள்ளாத பெண்கள் சிறந்த தாய்மார்களாக விளங்க முடியாது என்பது என்னுடைய அபிப்பிராயம். தற்காலத்துப் பெண்களிற்சிலருக்கு ஆங்கிலமொழியில் வல்லுநராக வேண்டுமென்ற விருப்பமிருக்கிறது. இது தவறு என்று கூற நான் முன்வரவில்லை. ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வோர் அழகு உண்டு. பல மொழிகளைப்பயில வேண்டுமென்ற அவா நம் பெண்மக்களுக்கு இருப்பதைப்பற்றி எவரும் மகிழ்ச்சியே கொள்வர். ஆனால் தாய்மொழியை மறந்து, பாலியத்தில் மழலைச்சொற்களால் பெற்றோரை மகிழ்வித்தது எந்த மொழியோ அந்த அருமையான மொழியைமறந்து, அந்நிய மொழிகளில் புலமைபெற விரும்புதல் அழகுடைத்தன்று என்றே நான் கூறுகிறேன். ஆதலின் ஆங்கில மொழியில் தற்காலத்து ஆண்மக்களுக்கிருக்கும் மயக்கத்தைப் பெண்மக்களும் கொள்ளாதிருக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன். தனது தாய்மொழியை மறக்கும் பெண்மணி, தனது தாய்த்திருநாட்டை மறந்தவளாகிறாள்; தனது மதத்தை மறந்தவளாகிறாள். இங்ஙனம் தனது பாஷையை, நாட்டை, மதத்தை மறந்த பெண்ணரசி அந்நிய மொழியினரால், அந்நியநாட்டினரால், அந்நிய மதத்தினரால் சரிசமானமானவளாக ஏற்றுக்கொள்ளப்படுகிறாளோ? இல்லை. ஆதலின் ஒவ்வொரு பெண் பள்ளிக்கூடத்திலும் தாய் மொழியை முதற்பாடமாகக் கற்றுக்கொடுக்க வேண்டும்; அம்மொழி மூலமாகவே எல்லாப் பாடங்களையும் நடத்த வேண்டும்; அம்மொழியில் சிறந்த புலமை உண்டுபண்ண வேண்டும்.

• • •

இந்திய தேச சரித்திரமே எல்லாவற்றிலும் மிக முக்கியமானது. இதைச் சரியான முறையில் கற்றுக் கொடுப்பதனாலேயே பெண் மக்களின் பிற்கால வாழ்வு பயனடைகிறது. சிறந்த புத்திரர்களைப் பெறுவதற்கும் தேச சரித்திரமே காரணமாயிருக்கிறது. அலெக்ஸாந்தரிடத்தில் தோல்வியுற்ற போரஸ் கடைசியில் காட்டிய வீரமும், அசோகனுடைய கருணையும், மீராபாயின் பக்தியும், பத்மினி தேவி தன் கற்பைக் காத்துக் கொண்டதும், சிவாஜியின் ஆண்டகைமையும், அவனுடைய தாயின் நேசபாவமும், மங்கம்மாளின் தரும உணர்ச்சியும் எந்தப் பெண்மணியின் மனதைத் தான் உருக்கி விடாது? இவர்களுடைய சரித்திரங்களைப் படித்த பெண் குழந்தைகளுக்குத் தாங்கள் அத்தகைய தாய்மார்களாகவும் மனைவி மார்களாகவும் விளங்க வேண்டுமென்ற விருப்பம் உண்டாகாதா? புராணங்களிலும் இதிகாசங்களிலும் உள்ள பத்தினிப் பெண்டிர்களின் சரிதத்தையும், வீரர்கள், கொடையாளிகள் முதலியவர்களுடைய சரிதத்தையும் பெண்களுக்குப்போதிக்கவேண்டும். இந்தியாவின் இயற்கை வளப்பத்தையும், வற்றாத நதிகளின் பெருக்கத்தையும், சிறந்த முனிவர்களையும் உயர்ந்த மூலிகைகளையும் தமது இருப்பிடமாகக்கொண்ட மலைகளின் உயரத்தையும்பெண்மக்களுக்குப்போதிக்கவேண்டும். இந்தியாவின் அழகிய மலைகளை, ஆறுகளை, வனங்களை, கோபுரங்களை, கோயில்களைப்பிற்காலத்தில் சென்றுபார்க்கும்படியானதோர் ஆவலைப் பெண்மக்களுக்குக் கிளப்பிவிடவேண்டும். இப்பொழுதுள்ள பெண் பள்ளிக்கூடங்களில் சரித்திரம் சரிவரப் போதிக்கப்படுவதில்லை. சிவாஜியை மலையெலி என்றும் கொள்ளைக்காரனென்றும் கூறும் சரித்திரபுத்தகங்களை நம் பெண்மக்கள் படித்தால் என்ன பயன் உண்டாகும்? தேச சரித்திரத்தைப்படிப்பதனால் பெண்மக்களுக்குத் தேசாபிமான உணர்ச்சி உண்டாதல் வேண்டும். பண்டைக்காலத்தில் இவ்வளவு பெருமையடைந்திருந்த இந்தத் தேசம் இப்பொழுது இவ்வளவு சீர்குலைந்து போகிறதே என்ற உணர்ச்சி அவர்களுக்கு வர வேண்டும். சீர்குலைந்துபோயுள்ள நமது நாட்டைப் பண்டை நிலைக்குக் கொண்டுவர வேண்டாமோ என்று அவர்கள் எழுச்சி கொள்ளவேண்டும். இத்தகைய வழியில் இந்த தேச சரித்திரம் கற்பிக்கப்படல் வேண்டும்.

• • •

ஓவியம், சிற்பம், நூல் நூற்றல், தையல், சித்திரித்தல் முதலிய துறைகளிலும்பெண்கள் இறங்கும்படி செய்ய வேண்டும். இறந்துபோயிருக்கும் ஓவியத்தையும், சிற்பத்தையும் மறுபடியும் பெண்மக்கள்மூலமாக உயிர்ப்பிக்க வேண்டும். ஓவியத்தில் பெண்களுக்கு இயற்கையாகவே ஓர் ஆர்வம் உண்டு. ஆதலின் இந்தப்பாடங்கள் அவர்களுக்கு மிகவும் இன்பம் தரத்தக்கனவாயிருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்தக்கலைகள் யாவும் இந்திய முறையையே அநுஷ்டித்தனவாக இருக்கவேண்டும். குடும்ப முறைகளையும் பள்ளிக்கூடங்களில் கற்றுக்கொடுத்தல் நலம். குடும்பச்சிக்கனம், குடும்பப்பாதுகாப்பு, நோய் வராது பாதுகாத்தல் முதலியன யாவும் பெண்களுக்குக் கற்பிக்க வேண்டுவது அவசியமாகும். அரசியல் விவகாரங்களையும் அவர்களுக்குச் சிறிது சிறிதாகப் புகட்டி வரவேண்டும் என்பது என் அபிப்பிராயம். பண்டைக்காலத்தில் எந்த விதமான ஆட்சி முறை நடைபெற்றது, இடைக்காலத்தில் எந்தவிதமான ஆட்சிமுறை நடைபெற்றது; இப்பொழுது எந்தவிதமான ஆட்சி முறை நடைபெறுகிறது, இவ்வாட்சி முறைகளுக்குள்ள வேற்றுமைகள் யாவை முதலியன யாவும் பெண்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். இந்தப் பயிற்சியினாலேயே அவர்கள் பிற்காலத்தில் நாட்டிற்கு நன்மைசெய்யும் இயக்கங்களோடு ஒத்துழைக்க முடியும்.

• • •

பொதுவாகக் கூறுமிடத்து, தேச முன்னேற்றத்திற்குக் கருவிகளாய் பெண்மக்கள் இருப்பதற்குக் காரணமாய கல்வியே அவர்களுக்குப் போதிக்கவேண்டும் என்று கூறலாம். இப்பொழுது இந்தியாவில், தாய்நாட்டின் பொருட்டு உழைக்க வீரத் தாய்மார்கள் வேண்டும்; கற்புக்கரசிகள் வேண்டும்; நல்லொளிகள் வேண்டும்; பத்தினிக்கடவுளர்கள்வேண்டும்; கண்ணகிகள் வேண்டும்; பல சாவித்திரிகள் வேண்டும்; பல சாந்தபீபிகள் வேண்டும்; பல சுல்தானா ரஜியாக்கள் வேண்டும். இத்தகையோரை உண்டாக்கும் கல்வியே இப்பொழுது வேண்டும். தென்னாட்டிலுள்ள தாய்மார்கள் இதற்காக முன் வருவார்களோ? தங்கள் நாட்டின் மானத்தைக் காப்பாற்ற விரும்பும் பெண்மக்கள் வெளிவருவார்களோ?

'வேதகல்யாணி'

## பிரதம மந்திரியின் உபந்யாசம்

ஸ்ரீமான் சக்கரவர்த்தி இராஜகோபாலாச் சாரியார் 'எங் இந்தியாவில்' பிரதம மந்திரியார் ஐ. சி. எஸ். ஊழிய வர்க்கத்தைப்பற்றி நடைபெற்ற வாதத்தின் போது காமன்ஸ் சபையில் பேசியதைப் பற்றிப் பின் வருமாறு எழுதுகின்றார்:—

சமீபத்தில் காமன்ஸ் சபையில் ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் பேசியது விஷயங்களை எவ் விதத்திலும் முன் இழுத்துச் செல்லவில்லை. ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜின் வாக் குறுதிகளுக்கும் பயமுறுத்தல்களுக்கும் அதிகமான மதிப்பு வைக்க வேண்டியதில்லையென்பதை அநுபவத்தில் ஜனங்கள் உணர்ந்திருக்கிறார்கள். அவர் சமயத்திற்குத் தக்கபடி நடந்து கொள்வதில் சாமர்த்தியம் வாய்ந்தவர். தம் கூட்டுக் கட்சியை எதிர்ப்பவர்களுடனும் இவர் போராட வேண்டியதா யிருக்கிறது. ஆனால் அவர் கூறியுள்ள சிலவற்றைக் கவனிக்க வேண்டியது அத்தியாவசியமாகின்றது. "ஐரோப்பா முழுமையிலும் இருக்கப்பட்ட ஜனங்கள் ஜாதிகள் ஆகிய இவைகளைக் காட்டிலும் அதிகமான இனங்களும் ஜாதிகளும் இந்தியாவில் இருக்கின்றன. ஆகவே பிரிட்டன் தன் ஆதிக்கத்தை இந்தியாவில் எடுத்து விட்டால், இந்தியாவில் கட்சிச்சண்டைகளும் குழப்பங்களும் சச்சரவுகளும் அநாகரிகச் செயல்களும் நடைபெறும்" என்று ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் கூறியுள்ளார். அந்நிய ஆதிக்கத்தின் தத்துவமும் அதன்நோக்கமும் இம்மொழிகளில் அடங்கிக்கிடக்கின்றன. இம்மாதிரியாகப் பிரதமமந்திரியார் கூறியதற்கு நாம் அளிக்கவேண்டியபதில் அஹிம்சையையும் ஐக்கியத்தையும் மேற்கொள்ள வேண்டியதேயாகும். இதுதான் நாம் செய்யவேண்டிய காரியமாகும். 3150 லட்சம் ஜனங்களை 1200 பிரித்தானியர்கள் ஆண்டுவருகிறார்களென்று பிரதமமந்திரியார் குறிப்பிட்டுள்ளார். 700 பிரிட்டிஷ் போலீஸ் உத்தியோகஸ்தர்களையும்சேர்த்து 1900 ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆட்சி புரிந்து வருகின்றார்கள். உலக சரித்திரத்திலுள்ள எந்த விஷயமும் இதற்குச் சமானமாக மாட்டாதென்று ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் இதைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். பிரிட்டிஷார் இதற்காகத் தம்மைப் பாராட்டிக்கொள்ள உரிமை பெற்றிருக்கிறார். லட்சக்கணக்கான ஜனங்களை 1900 பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் ஆண்டு கொண்டு வருவதன் தத்துவத்தை நாம் ஆராய்ந்து பார்ப்போமானால் அவமானப் படத்தக்க விதமாய் ஒத்துழைத்து வந்ததின் தன்மை நன்கு புலனாகும். நாம் முன்னேற்றம் அடைய வேண்டுமானால் நமது நடை, உடை பாவனை முதலிய அனைத்தையும் நமது நாகரிகத்திற் கொத்தவாறு மாற்றிக் கொள்ள வேண்டும். பிரதம மந்திரியார் எப்போதும் ஐ. சி. எஸ். ஊழியவர்க்கத்தினரே இந்தியாவின் ஆதிக்கத்தை நடத்திக்கொண்டு போகவேண்டுமென்று கூறுகிறார். இந்தியாவின் ஆட்சிமுறைக்கு உயிர்நாடியாக இருக்கவேண்டியது ஐ. சி. எஸ் ஊழியவர்க்கமே யாகுமென்று பிரதம மந்திரியார் குறிப்பிட்டுள்ளார். பிரதம மந்திரியார் ஐ. சி. எஸ். உத்தியோகஸ்தர்களின் கிளர்ச்சியையும் இங்கிலாந்திலுள்ள அவர்கள் நண்பர்களின் கிளர்ச்சியையும் ஒழிக்கவே இம்மாதிரி பேசியிருக்கிறார் என்று கருதவேண்டி யிருக்கிறது. பிரதம மந்திரியின் பேச்சினால் நாம் எத்தகையான முறையை அதன் போக்குப்படி விட்டுவைத்திருக்கிறோம் என்பது தெரிய வரும்.

### ஒரு கைதி மாற்றப்பட்டார்

ஆத்தூரைச் சேர்ந்த ஸ்ரீ சின்னபடையாச்சி என்ற அரசியல் குற்றவாளி கோயம்பத்தூர் சிறையினின்று கடலூர் சிறைக்கு மாற்றப்பட்டார்.

### மதுவிலக்குப் பிரசாரகர்கள்

அம்மையநாயக்கனூர் பிரபல மதுவிலக்குப் பிரசாரகர்களான ஸ்ரீமான்கள் எஸ். வேங்கடராம ஐயர், முங்காலா எஸ். பட்டாபிராமய்யர், கன்னையராம் முதலியார், சுப்ரமணிய முதலியார், வேங்கடசாமி அய்யவார், அழகர்சாமி நாயுடு, கருப்பைய்ய ஆச்சாரியார், களையப்பநாதர், சுப்பராம ஐயர், வேறு சிலர் ஆகிய இவர்கள் இம்மாதம் 7-ந் தேதியிலிருந்து இரண்டு மாத காலம்வரை நிலக்கோட்டை யூனியன் எல்லைக்குள் ஒருவிதமான உபந்யாசங்களும் செய்யக் கூடாதென்று நிலக்கோட்டை ஸ்டேஷனரி மாஜிஸ்ட்ரேட் 144-வது பிரிவுபடி உத்தரவு பிறப்பித்துள்ளார்.

## ஒரு வக்கீல்மீது பிராது

இராமசந்திரபுரத்தில் ஜில்லா முன்சீப் கோர்ட் ஏற்பட்டதிலிருந்து அரசாங்க வேலையை ஐகோர்ட் வக்கீலான ஸ்ரீமான் சில்லுகுரிவேங்கடராமய்யநாயுடுகாரு என்பார் கவனித்து வந்தார். பெத்தாபுரம் டிவிஷனல் ஆபீசர், ஸ்ரீமான் நாயுடு ஒத்துழையாக்காரரென்றும் தாலுக்கா போர்ட் எலெக்ஷன்களில் ஒத்துழையாக்காரர்களுக்காக உழைத்தா ரென்றும், ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டுக்குத் தெரிவித்தார்.

இதை ஸ்ரீமான் நாயுடு தெரிந்து கொண்டு தம்மைப் பற்றி ஏதாவது குறைகூறி அறிக்கை வந்திருக்கிறதா என்றும், அப்படியிருப்பின் நேரில் விஷயங்களை எடுத்துச் சொல்வதற்குத் தமக்குச் சந்தர்ப்பம் கொடுக்கப்பட வேண்டுமென்றும் ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டுக்கு எழுதிக்கேட்டுக்கொண்டார். ஜில்லாமாஜிஸ்ட்ரேட் 4-8-22-ல் காகினடாவில் தம்மை வந்து காணலாமென்று பதிலளிக்க அதன் பிரகாரம் ஸ்ரீமான் நாயுடு ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டைக் காண, அப்போது கீழ் வரும் சம்பாஷணை நடைபெற்றது.

ஜில்லா மாஜிஸ்ட்ரேட்:—ஒத்துழையா வக்கீல்கள் கையாக்கப்பட்டபோது வக்கீல்கள் வேலை நிறுத்தம் செய்தார்களே, அன்றைய தினத்தில் நியாய ஸ்தலத்திற்குத் தாங்கள் வந்தீர்களா?

ஸ்ரீ. நாயுடு:— அன்றைய தினத்தில் நான் நியாய ஸ்தலத்திற்கு வரவில்லை.

ஜி. மா:— ஏன் நியாய ஸ்தலத்திற்கு வரவில்லை?

ஸ்ரீ. நாயுடு:— நியாய ஸ்தலத்திற்குச் செல்லக் கூடாதென்று எல்லா வக்கீல்களும் தீர்மானித்துக் கொண்டார்கள். ஆகவே நான் நியாய ஸ்தலத்திற்கு வாராமல் நின்று விட்டேன்.

ஜி. மா:—இம்மாதிரி சொல்வது முறையானதாய் இல்லை. சமீபத்தில் நடைபெற்ற தாலுக்கா போர்டு எலெக்ஷன்களில் தாங்கள் வேலை செய்தீர்களா?

ஸ்ரீ. நாயுடு:— என்னுடைய நண்பர்கள் ஸ்ரீமான்கள் பி.வேங்கடரத்தினத்திற்காகவும் எம். சத்திய நாராயண ரெட்டிக்காகவும் வேலை செய்திருக்கிறேன்.

ஜி. மா:— ஸ்ரீமான் பி. வேங்கட ரத்தினம் என்பவர் யார்?

ஸ்ரீ. நாயுடு:— அவர்தான் சோடாவரத்தைச் சேர்ந்த ஸ்ரீமான் பிக்கிவா வேங்கடரத்தினம் ஆவர்.

ஜி. மா:—ஓ! அப்படியா! அவர் வேலையினின்றும் நீக்கப்பட்ட கிராமமுன்சீப்பும் பேர்பெற்றஒத்துழையாக்காரரும், அரசாங்கத்தின் விரோதியுமாவர்.

ஸ்ரீ. நாயுடு:— அவர் ஒத்துழையாக்காரர் தான். ஆனால் அவர் தாங்கள் கூறுகிறபடி அரசாங்கத்தின் விரோதியாக மாட்டார். அவர்நல்லமனிதர், அவர்நல்லவர், என் நண்பர் என்ற காரணத்திற்காகவே நான் அவருக்காக வேலை செய்தேன். தாலுக்கா போர்டுவிஷயங்களுக்கும்ஒத்துழையாமைக்கும் ஒருவித சம்பந்தமும் இல்லையென்பதே என்னுடைய அபிப்ராயம்.

ஜி. மா:— தங்களுடைய அபிப்ராயம் அதுவாயிருந்தால் உங்களோடு நான் பேச வேண்டியதுமுடிவுற்றது. அரசாங்கவேலைகள் உங்களுக்குக் கொடுக்கக் கூடாதென்று நான் தடை செய்கிறேன். தாங்கள் போகலாம்.

ஸ்ரீ. நாயுடு:— வந்தனம் ஐயா!

இத்துடன் சம்பாஷணை முடிவடைந்தது.

"சுயராஜ்யா"

### கிராமமுன்சிப்மீது தாவா

வேதகுபாக்கம் கிராம முன்சீப்பான ஸ்ரீமான் எம். சத்திய நாராயண ரெட்டி என்பார் தாலுக்காபோர்டு எலெக்ஷன்களில் ஒத்துழையாக்காரர்கள் வெற்றியுறுவதற்காக உழைத்தாரென்று அவருடைய எதிரிகள் அதிகாரிகளுக்குத் தெரிவித்தார்கள். இதைப்பற்றி விசாரணைசெய்த பின்னர் பெத்தாபுரம்டிவிஷனல்ஆபீசர்பிறப்பித்தகட்டளையில் காணப்படும் முக்கிய விஷயங்கள் வருமாறு:—

"வேதகுபாக்கம் கிராமமுன்சீப்பான ஸ்ரீமான் சத்திய நாராயணரெட்டி தாலுக்கா போர்டு எலெக்ஷன்களில் ஒத்துழையாக்காரர்களுக்காக உழைத்தாரென்பதைப்பற்றி வந்த மனுக்கள் படிக்கப்பட்டன. ஆகவே அவர் அரசாங்க வேலையைச் சரிவர கவனித்திருக்காமல் இருக்கக்கூடும். இச்சமயம் அவருக்கு எச்சரிக்கை செய்யப்படுகிறது."

"சுயராஜ்யா"

### ஏழு தொண்டர்கள் தண்டிக்கப்பட்டார்கள்

மதுரையைச்சேர்ந்த தேசியத் தொண்டர்களில் எழுவர், இம்மாதம் 11-ந் தேதியில் நிலக்கோட்டையில் நடைபெற்ற கள்ளுக்கடை ஏலத்தில் ஜனங்கள் சம்பந்தப்படாதவாறு பிரசாரஞ் செய்யப் பத்தாந் தேதியில் நிலக்கோட்டைக்குச் சென்று அன்றிரவில் முக்கிய தெருக்கள் வழியாகப் பஜனை செய்து கொண்டு போனார்கள். இவர்கள் பஜனை செய்து கொண்டு போகும்போது துண்டுப்பிரசுரங்களை வினியோகித்துக் கொண்டும் குடியினால் நேரிடும் கேடுகளை விளக்கி உரைத்துக் கொண்டும் மறுநாள் தினத்தில் நடைபெறவிருக்கும் கள்ளுக்கடை ஏலத்தில் ஏலம் எடுக்கக்கூடாதென்று சொல்லிக் கொண்டும் போனார்கள். இம்மாதிரி செய்யவே இவர்கள் எழுவரையும் போலீசார் கைதிசெய்து அடைப்பில் வைத்திருந்து மறுநாள் தினத்தில் சப் மாஜிஸ்ட்ரேட்டின் முன்னிலையில் கொண்டுபோய் நிறுத்தினார்கள். இவர்கள் மாஜிஸ்ட்ரேட் விதித்த அபராதத் தொகையைக் கொடுக்க மறுத்து இரண்டு நாள் வெறுங்காவல் தண்டனையை ஏற்றுக்கொண்டார்கள்.

### காங்கிரஸ் நிதியின் துர்விநியோகம்

கிலாபத் காங்கிரஸ் கமிட்டிகளின் ஆதரவில் ஒரு கூட்டம் நடைபெற்றதென்றும் அக்கூட்டத்தில் பின்வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதென்றும் ஆஜ்மீர் செய்தி ஒன்று கூறுகின்றது. அத்தீர்மானம் வருமாறு:—

ஸ்ரீமான்.................என்பார் காங்கிரஸ் நிதியைச்சேர்ந்த தொகையில் 12 ஆயிரம் ரூபாயை அபகரித்துவிட்டனர் என்று மாகாண காங்கிரஸ் கமிட்டி நிர்வாகிகளினின்றும் கணக்குகளினின்றும் தெரியவருகிறபடியால் ஆஜ்மீர் நகர வாசிகளின் இக்கூட்டமானது அத்தகைய நடத்தையை வெகுவாய்க் கண்டிக்கின்றது.

### ஜபல்பூர் நகரபரிபாலன சபை

காங்கிரஸ் சட்டமறுப்பு விசாரணைக் கமிட்டியார் ஜபல்பூருக்குச் சென்றிருந்த காலையில், அந்நகர, நகரபரிபாலன சபையார், அங்கத்தினர்களுக்கு உபசாரப் பத்திரமொன்றை வாசித்துக் கொடுத்ததல்லாமல் தேசியக் கொடியையும் டவுன் ஹாலில் நாட்டினார்கள் என்பதையும் நேயர்கள் அறிவார்கள். இவர்கள் இம்மாதிரி செய்தது தகாத காரியமென்று ஸ்தலஸ்தாபன இலாகாமந்திரியார் அபிப்ராயப்பட்டாலும் அவ்விஷயமாக ஒருவித நடவடிக்கை எடுத்துக் கொள்ளக் கூடாதென்று கருதி அம்மாதிரியாகவே கமிஷனருக்கும் அறிவித்து விட்டார்.

### 134-ம் ஆண்டில் இறந்த பெரியார்

ஜானி ஷெல் என்ற பெரியார் தம் 134-ம் ஆண்டில் டென்மார்க் எனுமிடத்திலுள்ள கிரேசேகிரீன் எனுமிடத்தில் இறந்து விட்டாராம். இவர் டென்மார்க் எனுமிடத்தில் 1788-ம் ஆண்டில் பிறந்தவர் என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. இவருடன் கூட இவருடைய இரு குமாரர்களும் இறந்து விட்டார்கள். மூத்த குமாரனின் வயது 90; இளையகுமாரனின் வயது 9. இவருடையமுதல்மனைவி 122-வருட காலமாக இருந்து 12 வருடங்களுக்கு முன்தான் இறந்தனராம். இம்மனைவியார் இறந்த பின்னர் மேற்கூறிய பெரியார் இன்னொரு மனைவியை மணந்து கொண்டார். அம்மனைவிக்குப் பிறந்த புத்திரர் தான் 9-ம் வயதில் இறந்தவராவர்.







## சட்டமறுப்புக் கமிட்டி

### காங்கிரஸ் விசாரணை

#### பண்டித மோதிலால்நேரு உபந்யாசம்

காங்கிரஸ் விசாரணை சட்டமறுப்புக் கமிட்டியார் ஆசாமில் தங்கள் விசாரணையை நடத்திவிட்டு, இம்மாதம் 11-ந் தேதியில் கல்கத்தாவந்து சேர்ந்தார்கள். பிற்பகலில் கமிட்டியார் ஸ்ரீமான், சி. ர. தாஸ் வீட்டிற்குச் சென்று அவரைக்கண்டு பேசினார்கள். பின்னர் கமிட்டியார் சில சாட்சிகளை விசாரணை செய்தார்கள். கல்கத்தாவில் வசிக்கும் இந்திய சமூகத்தார் காங்கிரஸ் விசாரணை சட்டமறுப்புக் கமிட்டிக்கும் கிலாபத் கமிட்டிக்கும் இம்மாதம் 13-ந் தேதியில் உபசாரப்பத்திரம் வாசித்துக் கொடுத்தார்கள். அப்போது ஹக்கீம் அஜ்மல்கான், பண்டித மோதிலால் நேரு, ஸ்ரீமான்கள் அப்துல்மஜீத் பதானி, பேட்டல், இராஜகோபாலச்சாரியார் ஆகிய இவர்கள் சொற்பொழிவு நடத்தினார்கள். ஹக்கீம் அஜ்மல்கான் அக்கூட்டத்தில் பேசியதன் சாரம்வருமாறு:—

இந்தியாவிலுள்ள மாகாணங்களில் வங்காள மாகாணமே முன்னேற்றமானதாயிருக்கிறது. சுயராஜ்யம் அடையும் விஷயத்திலும் இம்மாகாணம் முன்னேற்றமாகவே காரியங்களைச் செய்யக்கூடும். இந்தியாவின் தற்போதைய நிலைமையைக் கவனிக்குமளவில் முழு ஒத்துழையா திட்டத்தை மேற்கொள்வதற்கு முன்வேறேதாகிலும் ஒன்றைச் செய்ய வேண்டியதாயிருக்கிறது. ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜின் உபந்யாசத்திற்குப் பின்னர் மிதவாதிகள் கூட்டத்திலேயே உறுதி இல்லாமல் இருக்கிறது. மிதவாதிகள் பிரதம மந்திரியார் உபந்யாசத்தைக் கண்டித்திருக்கிறார்கள். இன்னும் கண்டித்துக் கொண்டு போவார்கள். ஆகவே மிதவாதிகளுக்கும் ஒத்துழையாக்காரர்களுக்கும் அதிகமான வித்தியாசமே கிடையாது. அரசாங்கத்தைவிட்டு விட்டு நம்முடன் வந்து சேர்ந்து கொள்ளும்படியாய் மிதவாதிகளை நாம் கேட்டுக்கொள்ள வேண்டும். இது முடிந்தால் சுயராஜ்யம் தானாகவேகிடைக்கும். இந்துக்களும் முஸ்லிம்களும் ஒத்துழைக்கவேண்டியது இன்றியமையாததாகும். ஒவ்வொருவரும் கதரை உடுத்திக்கொள்ள வேண்டியது அத்தியாவசியமாகும். பண்டித மோதிலால் நேரு அக்கூட்டத்தில் பேசியது வருமாறு:—

காங்கிரஸ் விசாரணை சட்டமறுப்புக் கமிட்டியார் தேசத்தின் தற்காலநிலையை ஆராய்ந்துவருகின்றனர். இது முடிந்தவுடன் திட்டத்தில் எத்தகைய மாற்றத்தையுண்டாக்குவது என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்வார்கள். நாங்கள் விசாரணையை ஏறக்குறைய முடித்துவிட்டோம், அப்படியிருந்தும் எங்கள் ஆராய்ச்சி அறிக்கை எம்மாதிரியானதாய் இருக்குமென்று சொல்லக்கூடவில்லை. ஆனால் ஒன்று மாத்திரம் சொல்லக்கூடும். அஃது ஒத்துழையாமை இறந்து படவில்லை என்பதாம். இது கதரும் இந்து முஸ்லிம் ஒற்றுமையும் ஜனங்களிடையில் அதிகமாய்ப் பரவி இருக்கிறதென்பதைக் காட்டுகிறது. நெ சிலர் திட்டத்தில் மாற்றம் ஏற்பட வேண்டுமென்று கூறலாம். அதை நாங்கள் கவனிப்போம். ஒத்துழையாத் தருமத்தையே மாற்றம் செய்ய வேண்டுமென்பதைப்பற்றிக் கவனிக்கப்பட மாட்டாது. சிலர் ஒத்துழையாத் திட்டத்தில் சிலவற்றைச் சேர்க்க வேண்டுமென்றும் குறைக்க வேண்டுமென்றும் கூறக்கூடுமானாலும் தற்கால நிலைக்குத்தக்க பரிகாரம் ஒத்துழையாமையே யாகுமென்பதை ஒவ்வொருவரும் உணரல் வேண்டும். ஒத்துழையாமையை அநுஷ்டிக்கும் முறைகளில் வேண்டுமானால் மாற்றங்களை உண்டாக்கிக்கொள்ளலாம். ஆனால் ஒத்துழையாக் கொள்கைகளில் மாற்றத்தையுண்டாக்குதல் முடியாத காரியமாகும். நாங்கள் ஒத்துழையாமையைவிட்டுவிட வேண்டுமென்று கூறுவது எங்களைப் பொறுத்ததல்ல, ஒத்துழையாமையின் வெற்றி அரசாங்கத்தாரின் தோல்வியைக் காட்டியிருக்கிறது. ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜின் உபந்யாசம் மிதவாதிகளின் கண்களைத் திறந்திருக்கிறது. ஒத்துழையாக் கொள்கைகளை மிதவாதிகள் இப்போதும் ஏற்றுக்கொள்ள சமயம் இருந்துகொண்டே இருக்கிறது. திட்டத்தில் ஏதாவது மாற்றம் உண்டாக்கினால் அதற்காக வெட்கப்படவேண்டிய அவசியமில்லை. ஆனால் ஒத்துழையாக் கொள்கையை விட்டுவிடக்கூடவே கூடாது. ஒத்துழையாத் திட்டத்தை நிறைவேற்றுவதில் வங்காள கிலாபத் கமிட்டியார் கவலையீனமாய் இருந்தது கண்டிக்கத் தக்கதாகுமென்று ஸ்ரீ அப்துல்மஜீத் பதானி கூறினர். காங்கிரஸில் மிதவாதிகள் சேருவதனால் அதிகமான நன்மை ஏற்பட்டு விடாதென்றும் ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜின் உபந்யாசத்திற்குப் பின்னரும் மிதவாதிகள் அரசாங்கச்சார்பைவிட்டுவிடுவோர்கள் என்று நினைப்பதற்கில்லை யென்றும் காங்கிரஸ் கமிட்டிகளின் அங்கத்தினர்களாய்ச் சேர்ந்து கதர் உடுத்திக் கொள்வதல்லாமல் திலகர்சுயராஜ்ய நிதிக்கும் பணம் கொடுக்க வேண்டுமென்றும் ஸ்ரீமான் பேட்டல் கூறினர்.

ஸ்ரீமான் இராஜகோபாலாச்சாரியார் இன்னும் தாம் மிதவாதிகளிடத்தில் நம்பிக்கை கொண்டிருப்பதாகவும் அவர்கள் தங்களுடனேயே சேர்ந்து இருப்பதாகவும் ஆகவே அவர்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றும் கூறினர்.

சட்ட மறுப்புக் கமிட்டியார் இம்மாதம் 15-ந் தேதியில் பாடலி புத்திரத்திற்கு வந்து 15, 16-ந் தேதிகளில் அநேக சாட்சிகளை விசாரணை செய்தார்கள். ஸ்ரீமான் மஷ்குல் ஹக்கைப் பார்க்கத் தங்களுக்கு அநுமதி கொடுக்க வேண்டுமென்று சிறைச்சாலை சூபரின்டெண்டண்டிற்கு கமிட்டி அங்கத்தினர்கள் சிலர் எழுதிக் கேட்க, சூபரின்டெண்டண்ட் முடியாதென்று மறுத்துவிட்டார். கமிட்டியார் தங்கள் விசாரணையை முடித்துவிட்டுக் கலைந்து அவரவர்கள் ஊருக்குப் புறப்பட்டுவிட்டார்கள்.

டாக்டர் அன்சாரி அறிக்கையைத் தயார் செய்வார் என்று தெரிகிறது. அறிக்கையைப் பற்றி வாதம் நடத்த கமிட்டியார் 31-ந்தேதியில்பம் பாயில்கூடுவர். முக்கியமான விஷயங்கள் சம்பந்தமாகக் கமிட்டியாரின் அறிக்கை ஒரே பெற்றித்தாய் இருக்குமென்று சொல்லப்படுகிறது.

### அமெரிக்க ரெயில்வே சுரங்கத் தொழிலாளர்கள்

அமெரிக்க ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த ரெயில்வே தொழிலாளர்களும் சுரங்கத் தொழிலாளர்களும் செய்திருக்கும் வேலை நிறுத்தம் இன்னும் முடிவடையாமல் இருந்து வருகிறது. ஜனாதிபதி ஹார்டிங் இதில் தலையிட்டும் நிலையில் அதிகமான மாற்றம் ஏற்படாமலே இருந்து வருகிறது. ஒன்றிரண்டு இடங்களில் ரெயில்வே வண்டிகள் நாசமாக்கப்பட்டனவென்றும், ரெயில்வே வண்டிகளின் மீது வெடி குண்டுகள் போடப்பட்டனவென்றும் அதனால் சில பிரயாணிகளுக்குக் காயம் ஏற்பட்டதென்றும் செய்திகள் கூறுகின்றன.

### தண்டுகளினின்று வெளியேற்றப்பட்டோர்

சென்ற பிப்ரவரி மாதத்திய இந்திய சட்டசபைக் கூட்டத்தில், தண்டுகளினின்று வெளியேற்றப்பட்ட நபர்கள் விஷயமாகவாதம் நடைபெற, அதைப்பற்றிக் கவனிப்பதாக சர் ஹென்றி காட்பிரேபெல் என்ற அரசாங்க அங்கத்தினர் கூறினர். அதற்கிணங்க, இந்தியா அரசாங்கத்தார் தாங்கள் ஆராய்ச்சிசெய்ததைப்பற்றி ஓர் அறிக்கையை வெளியிட்டிருக்கின்றனர். அவ்வறிக்கையில், 1919 முதல் 1922-ம்ஆண்டுகளுக்கிடையில்தான் தண்டுகளின்றுசிலநபர்கள்வெளியேற்றப்பட்டிருக்கிறார்களென்றும் இவர்களின் மொத்தத் தொகை 27 ஆகுமென்றும் இதிலும் ஐந்து பேர் மறுபடியும் வந்து வசிக்க அநுமதிக்கப்பட்டுவிட்டனரென்றும், மற்றவர்களை வெளியேற்றியிருப்பது சரியேயாகுமென்றும் இவர்கள் அரசாங்கத்தாருக்கு விரோதமாகக் காரியங்களைச் செய்துள்ளார்களென்றும் ஆயினும் இவர்களைப்பற்றித் திரும்பவும் கவனிக்கும்படியாய் அந்தந்த தண்டுகளின் இராணுவ உத்தியோகஸ்தர்களை வேண்டிக்கொள்ளப் போகிறதாகவும் காணக்கிடக்கிறது.

### காந்தி ஜன்மதினக் கொண்டாட்டம்

கூர்ஜ்ஜர மாகாண காங்கிரஸ் கமிட்டியார் இம்மாதம் 13-ந் தேதியில் புரோச் எனுமிடத்தில் கூடி, சமீபத்தில் வரப்போகும் காந்தி ஜன்மதினத்தைக் கூர்ஜ்ஜரம் முழுமையிலும் கொண்டாட வேண்டுமென்றும் அத்தினத்தில் வேலைகள் யாவும் நிறுத்தப்படவேண்டுமென்றும், ஊர்வலங்கள் போதுக்கூட்டங்கள் நடத்தவேண்டு மென்றும், திலகர் சுயராஜ்ய நிதிக்குப் பணந் தண்டல்செய்து அதை கூர்ஜ்ஜர தேசீய சர்வ கலாசாலையின் கட்டிடத்திற்காக எடுத்துவைக்க வேண்டுமென்றும் தீர்மானித்தார்கள்.

### வங்காளத்தில் வெள்ளத்தின் கொடுமை

மிதுனபுரி ஜில்லாவைச் சேர்ந்த காதால் சப்டிவிஷனில் நூறு சதுரமைல் அளவுள்ள பூபாகம் தண்ணீரில் மூழ்கிக் கிடக்கிறது. இதனால் ஜனங்களுக்கு அதிகமான கஷ்டம் உண்டாகி யிருப்பதைத் தடுப்பதற்காக அரசாங்கத்தார் கஷ்டநிவர்த்திக்கான ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றனர். வருமான இலாகா அங்கத்தினர் வெள்ளத்தினால் கஷ்டமடைகிறவர்களுக்கு உதவி செய்வதற்காக டிவிஷனல் கமிஷனரிடம் ஆயிரம் ரூபா கொடுத்தார். வெள்ளத்தின் பயனாய் ஹூக்லி ஜில்லா ஆரம்பாக் சப்டிவிஷனில் ஒன்பது பேர் உயிர்துறந்தனர்.

### ஒரு மாஜிஸ்ட்ரேட்டின் தீரச்செயல்

வெள்ளத்தால் பாதிக்கப்பட்டிருக்கும் பிரதேசத்தில் இருக்கும் ஹௌரா ஜில்லா மாஜிஸ்ட்ரேட், மீன் காரியோருத்தி வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போவதைக் கண்டு தம் உயிரையும் பொருட்படுத்தாமல் அவளைக் காப்பதற்காக ஆற்றில் குதித்தார். வெள்ளத்தின் ஓட்டம் அதிகமாய் இருக்கவே மாஜிஸ்ட்ரேட்டும் வெள்ளத்துடன் அடித்துக்கொண்டு போகும் நிலையில் இருக்கையில் மற்றவர்கள் குதித்து மாஜிஸ்ட்ரேட்டையும் மீன்காரியையும் காப்பாற்றினார்கள்.

## கதரின் பறிமுதல்

சுராதா ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக்காரியதரிசி சகோதரப் பத்திரிகையொன்றிற்குப் பின்வருமாறு தெரிவிக்கிறார்:—

காங்கிரஸ் தொண்டரான ஸ்ரீமான் சத்தியபாடிபட் காய்க் என்பார், பேராம்பூர் ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயத்திலிருந்து சுராதா எனுமிடத்திலுள்ள அதன் கிளைக்குக் கதர் மூட்டையொன்றை மாட்டு வண்டியில் போட்டுக் கொண்டு சென்று கொண்டிருந்தார். ஸ்ரீமான் சத்தியபாடி பட்காய்க் என்பார் சென்ற மார்ச் மாதத்தில் 188-வதுபிரிவுபடி குற்றஞ் சாட்டப்பட்டு 15 ரூபா அபராதம் விதிக்கப்பட்டார். ஆனால் அன்னார் அபராதத் தொகையைக் கட்டமறுத்துச் சிறைதண்டனையை ஏற்றுக் கொண்டார். அத்தொகையை இப்போது பெறுவதற்காக உள்ளூர் மாஜிஸ்ட்ரேட், வண்டி, சுங்கச் சாவடியண்டையில் வருகையில் தம் பியூன் மூலமாய் ரோட்டில் இருக்கும் போலீசாருக்குச் சமாசாரம் சொல்லியனுப்பி கதரைப் பறிமுதல் செய்யும்படியாய்க் கட்டளையிட்டனுப்பினர். அச்சந்தர்ப்பத்தில் போலீஸ்காரர்கள் சுபாத்து பழகிக் கொண்டிருக்கவே, இன்ஸ்பெக்டர் மாஜிஸ்ட்ரேட்டின் பியூனையே அனுப்பி அந்தக் கதரைப் பறிமுதல் செய்தார்.

### பிரதம மந்திரியார் உபந்யாசமும் இந்திய நிர்வாக சபை அங்கத்தினர்களும்

இந்தியா அரசாங்க நிர்வாக சபையில் இருக்கும் மூன்று இந்திய அங்கத்தினர்களும், மாகாணங்களிலுள்ள மந்திரிகளும் தங்கள் பதவிகளை இராஜிநாமா செய்துவிட வேண்டுமென்றும் இல்லாவிட்டால் பிரதம மந்திரியாரின் உபந்யாசத்தைப்பற்றிக் கவனிப்பதற்காக உடனே ஓர் அவசரக் கூட்டம் கூட்டப்பட்டு, அதில் ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் தாம் இந்தியாவைப் பற்றிச் சொன்னவைகளை வாபீஸ் வாங்கிக் கொள்ளும்படியாகச் செய்யப்படுவதற்கு வேண்டியவைகளைச் செய்ய வேண்டுமென்றும் சிம்லாவிலுள்ள பிரபல இந்தியர்கள் அபிப்பிராயப்படுகிறார்களாம்.

### மானநஷ்ட வழக்கு

சிலமாதங்களுக்குமுன் ஒத்தைப்பாலத்தில் நடைபெற்ற குழப்பத்தில் போலீஸார் நடந்து கொண்ட மாதிரியைக்கண்டித்து ஸ்ரீமான்கள் பிரகாசம் முதலியோர் ஓர் அறிக்கையை ஹிந்து பத்திரிகையில் வெளியிட்டிருந்தனர். போலீஸ் உத்தியோகஸ்தரான ஸ்ரீமான் ஹிச்காக் இவ்வறிக்கையில் மானநஷ்டமான விஷயங்கள் இருக்கின்றன என்று கள்ளிக்கோட்டை சப்பார்டினேட் கோர்ட்டில் வழக்குத்தொடுக்க முடிவில் ஸ்ரீமான்கள் பிரகாசமும் மற்றவர்களும் ஆயிரம் ரூபாயும், கோர்ட்செலவும் ஹிந்து பத்திரிகை ஆயிரம் ரூபாயும் கோர்ட்டுச்செலவும் கொடுக்க வேண்டுமென்று நீதிபதி தீர்ப்புச்சொன்னார்.

### ஒரு தலைமை உபாத்தியாயரின் பெருந்தகைமை

சென்னைத் திருவல்லிக்கேணி ஸ்ரீமகாலட்சுமி ஏஜென்சியைச் சேர்ந்த ஸ்ரீமான் இராமச்சந்திரய்யர் சில காந்தி குல்லாய்களை ஹிந்து ஹைஸ்கூல் தலைமை உபாத்தியாயருக்கனுப்பிஅவைகளைத் திலகரின்ஞாபகார்த்தமாய் ஏழை மாணவர்களுக்கு விநியோகிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். தலைமை உபாத்தியாயர் "தாங்கள் அனுப்பிய குல்லாய்களுக்காக வந்தனம். ஆனால் அவைகளை மாணவர்கள் தரிக்கும்படியாய்க் கட்டளையிட முடியா"தென்று கூறி குல்லாய்களைத் திருப்பி அனுப்பிவிட்டார் என்று ஒரு நிருபர் சகோதரப் பத்திரிகைக்கு எழுதியுள்ளார்.

### சிறந்த மாதம்

கீர்த்தி வாய்ந்த மனிதர்களில் பெரும்பாலோர் பிப்ரவரி மாதத்திலேயே ஜனித்திருக்கிறார்களென்றும் அம்மாதமே சுபமான மாதமாகுமென்றும் ஸ்ரீமான் எப் ஜே. ஆலன் என்ற ஆங்கிலேயர் அபிப்ராயப்படுகிறார்.

### கதர் சந்தை.

இன்று முதல் 20-ந் தேதி வரை கல்கத்தாவில் கதர் சந்தை ஒன்றை ஏற்படுத்த சர். பி. ச. ரே என்பார் ஏற்பாடு செய்திருக்கிறார். இச்சந்தையில் கதரும் பருத்தி விதைகளும் கண்காட்சிப் பொருள்களாக வைக்கப்பட்டுக் காண்பிக்கப்படும்.

### போலீஸ் இன்ஸ்பெக்டர்களும் சப் இன்ஸ்பெக்டர்களும் ஆயுதம் தரிக்கலாம்

வேலையில் இருக்கும்போது போலீஸ் இன்ஸ்பெக்டர்களும் சப்இன்ஸ்பெக்டர்களும் துப்பாக்கியும் அதற்குவேண்டியசாமான்களும் வைத்துக்கொண்டிருக்கலாமென்று இந்தியா அரசாங்கத்தார் ஒரு கட்டளையைப் பிறப்பித்துள்ளார்கள்.

## காங்கிரஸ் அங்கத்தினர்கள் புடைக்கப்பட்டார்கள்

வடமதுரை காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி, ஒரு பத்திரிகைக்குப் பின்வருமாறு தெரிவிக்கிறார்:—

வடமதுரை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் கூட்டமொன்று சென்ற 13-ந் தேதியில் கோசிகாலன் எனுமிடத்தில் நடைபெற்றது. இக்கூட்டம் பொதுக்கூட்டமல்ல வாகையால் பதினொரு அங்கத்தினர்களே வந்திருந்தார்கள். கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கையில் சில கான்ஸ்டேபில்களும், கலே என்ற பேர்பெற்ற பழையகுற்றவாளி ஒருவனும் போலீஸ் இன்ஸ்பெக்டரின் சமையல்காரர்களில் ஒருவனும், அநேக காஞ்சாக்களும், குற்றஜாதியைச் சேர்ந்தவர்களும் அவ்விடத்தைச்சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருந்தார்கள். சிலர் பலாத்காரமாய்க் கூட்டம் நடைபெற்றுக்கொண்டிருக்கும் இடத்திற்குள் நுழைந்தார்கள். கூட்டம் முடிவடைந்தவுடன் அங்கத்தினர்கள் தெருவுக்குவருமுன், ராம்தயால்சர்மா என்ற அங்கத்தினரைக் கலே என்பவன் பிடித்துக்கொண்டு செருப்பால் புடைத்தான். கலே இவரை முக்கிய தெருக்கள் வழியாய்ச் செருப்பால் அடித்துக் கொண்டே அழைத்துச்சென்றான். பின்னர் இவர் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். ஸ்ரீமான் மதன்லால் எனும் இன்னோர் அங்கத்தினரைக் கான்ஸ்டேபில் ஒருவர் பிடித்துக்கொண்டு தானாவுக்கு அழைத்துச்சென்றார். பின்னர் இவ்விரு அங்கத்தினர்களும் விடுதலை செய்யப்பட்டார்கள். இம்மாதிரியெல்லாம் நடைபெற்றும் அங்கத்தினர்கள்பால் பலாத்காரம் கிஞ்சித்தும் இல்லாமலே இருந்தது.

### ஸ்ரீமான் ரங்கண்ணா

மதுபான மறியல் வேலை செய்த குற்றத்திற்காகக் கைதி செய்யப்பட்டு விசாரிக்கப்பட்ட ஸ்ரீமான் ரங்கண்ணாஎன்பாருக்கு வேலூர் சப் டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட் ஒரு வருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

### சுவாமி சத்ய தேவர்

இம்மாதம் 11-ந்தேதியில் ஆஜ்மீரில் சுவாமி சத்யதேவர் ஓர் உபந்யாசம் செய்தார். அவ்வுபந்யாசத்தில் ஜனங்கள் சட்டசபைகளில் அங்கம்பெற வேண்டுமென்றும் ஆனால் அரசாங்கத்துடன் சேர்ந்துழைக்காமல் இருக்கவேண்டு மென்றும், சட்டசபைகளுக்குத் தாம் போகவேண்டுமென்ற கூறுவதன் கருத்து அரசாங்க வேலைக்குத் தடங்கல் உண்டாக்கவேண்டுமென்பதென்றும் கூறினார்.

### குருட்டுஸ்திரீ பட்டதாரி

ஸ்காத்லாந்தில் மிஸ்மேரி பிரேஸ் ஆண்டர்சன் என்ற குருட்டுஸ்திரீ சமீபத்தில் பி. ஏ. பரீட்சையில் தேறியிருக்கிறாள்.

### பசுக்கொலையை நிறுத்திய நகரபரிபாலன சபைகள்

கீழ்க்கூறும் நகரபரிபாலன சபைகள் பசுக்கொலையையும் கன்றுக்குட்டிக்கொலையையும் நிறுத்தத் தீர்மானித்துள்ளன. அவை வருமாறு:— பாசெப்பி, பேசின் பெல்காம், பாகல்பூர், கல்கத்தா, கான்பூர், கடப்பை, தால்தன்குஞ்ஜ், டோராடூன், கயை, குண்டூர், ஹாசாரிபாக், ஹோஷியார்பூர், ஹௌரா, நிஜாம் சமஸ்தானத்தைச் சேர்ந்த ஐதராபாத், ஜாகோபாபாத், ஜால்பாய்குரி, கார்வார், கர்நூல், லாகூர், மசூலிப்பட்டணம், மாநிக்ஸாரி, மிர்புர்காஸ், மாங்கீர், மொராடாபாத், மோல்மெயின், முத்ராஹம் நாகபுரி, நெல்லூர், புரோம், சேலம், சம்பல்பூர், சர்கோதா, சியோனி, சிம்லா, தானா, தாதன்.

### பஞ்சம்

கடப்பை, கர்நூல், அனந்தபூர், பல்லாரி ஆகிய இந்த நான்கு ஜில்லாக்களில் பஞ்சம் உண்டாகியிருக்கிறதென்றும் இப்பஞ்சத்தை ஒழிப்பதற்காகப் பஞ்ச நிவர்த்தி வேலைகள் உடனே அரசாங்கத்தாரால் செய்யப்பட வேண்டியிருக்கிறதென்றும், காங்கிரஸாரும் இவ்விடத்தில் கைராட்டினங்களையும், கைத்தறிகளையும் பரப்பி ஜனங்களைப் பஞ்சத்தின் கொடுமையினின்று நீக்க வேண்டியிருக்கிறதென்றும் ஒரு நிருபர் சுயராஜ்யா பத்திரிகையில் எழுதி இருக்கிறார்.

மாற்றுரைக்கிடங்கொடேல். ஏற்புகழ்ச்சி. ஓடுபெறநில். நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)



சென்னை 1922ஞு ஆகஸ்ட்மீ 18உ

## திலகரும் காந்தியும்

இந்தியாவில் சில பகுதிகளில் சில காலமாகத் திலகர் பெருமான் அரசியலில் காந்தியடிகளோடு மாறுபட்டவர் என்றும், அவர் ஒத்துழைப்பை நாடினரென்றும் இவர் ஒத்துழையாமையை நாடுகிறாரென்றும் சொல்லப்பட்டு வருகின்றன. திலகர் பெருமான் தூல உடல் மறையாதிருப்பின், அவர் தங்கருத்தை இவ்வேளையில் வெளியிட்டு உண்மை விளங்கச்செய்வர். அன்னார் புகழுடம்பு எய்தியுள்ள இந்நாளில் அவர்தம் அரசியல் வாழ்வைக் கொண்டே அவர் அரசியல் கொள்கையை நிறுவல் வேண்டும்.

திலகர் பெருமான் கற்கவேண்டுவனவற்றைக் கற்றுக் கேட்கவேண்டுவனவற்றைக் கேட்டு, நாடு உரிமையிழந்திருப்பதைக் கண்டு, உரிமைவழி தேடி உழைக்கத் தொடங்கினர். திலகர்பிரான் ஒத்துழைப்பு நெறி பற்றி உழைத்தாரா, அல்லது ஒத்துழையா நெறிபற்றி உழைத்தாரா என்பது ஈண்டு ஆராயற்பாலது. திலகர் பெருமான் தேச சேவை செய்யத் தொடங்கியபோது, தேசத்தில் சுதந்திர வேட்கையேஎழாமலிருந்தது. அதைக்கண்ட திலகர் பெருமான் "இப்பொழுது தேசத்துக்கு ஒத்துழையாமை உபதேசிப்பதைப்பார்க்கிலும், நாமே ஒத்துழையாமை அனுஷ்டித்துக் காட்டித் தேசத்தை விழிக்கச்செய்து, பின்னர்த் தேசத்தை ஒத்துழையா நெறியில் நடத்தல் வேண்டும்" என்று கருதித் தேசத்தொண்டில் தலைப்பட்டார் என்பது அவர்தம் அரசியல் வாழ்வை ஆராய்வோர்க்கு இனிது புலனாகும்.

திலகர் பெருமான் ஆங்கிலத்தில் உயர்தரப் பட்டம் பெற்றும் அதிகாரவர்க்க சேவையில் கருத்தைச் செலுத்தினாரில்லை. அப்பெரியார் சட்டப் பரீட்சையில் தேறிப் பட்டம் பெற்றும் பிரிட்டிஷ் நீதிஸ்தலங்களில் ஊழியம் புரிந்து பணம் பறித்தாரில்லை. அவர் சின்னாள் சட்டசபையில் அமர்ந்ததும், சில வேளைகளில் பிரிட்டிஷ் நீதிஸ்தலங்களில் பேசினதும், வழக்குத் தொடுத்ததும் எற்றுக்கு என்று சிலர் வினவலாம். அவைகளின் நிலைமையை இந்தியர்க்குணர்த்தி, அவைகளின் மீது நம்மவர்கள் கொண்டிருந்த மோகத்தைத் தணிவித்து, தேசத்தார் மனதை ஒத்துழையாமையில் பதிக்க வேண்டியே திலகர் பெருமான் அக்கருமங்களில் தலையிட்டார் என்று பதிலிறுக்கலாம். ஒத்துழைப்பில் அவர் உள்ளம் பதிந்திருப்பின், அவர் 1906-ம் வருட காங்கரஸில் பிணக்குக் கொண்டிருக்கமாட்டார்; 1907-ம் வருட காங்கரஸைப் பிளந்தெறிந்திருக்க மாட்டார். கோகலே முதலிய மிதவாதிகள் திலகர்பெருமானோடுகலந்துழைக்கஒருப்படாது ஓடினதற்குக்காரணமென்னை? திலகர்பெருமான் ஒத்துழையாமைக்கு அடிகோலிவந்ததைமிதவாதிகள் உணர்ந்தமையேயாகும். திலகர் பெருமான் மது விலக்கைப்பற்றியும் நாட்டுக் கல்வியைப்பற்றியும் சுதேசியத்தைப்பற்றியும் பேசியிருப்பதை ஈண்டு விரிக்கிற் பெருகும். பஹிஷ்காரம் என்ற உணர்வை நாட்டிற்கு உண்டு பண்ணினவர் திலகர் பெருமானே யாவர். அவர் விதைத்த பஹிஷ்கார விதைதான், இப்பொழுது சட்டசபைபஹிஷ்காரமாய்-பிரிட்டிஷ் நீதிஸ்தல பஹிஷ்காரமாய்-அரசாங்கஉதவி பெறும் பாடசாலை பஹிஷ்காரமாய் - முளைத்திருக்கிறது. அவர்பேசிய மது விலக்கும் பரதேச ஆடை பஹிஷ்காரமும் இப்பொழுது கள்ளுக்கடை மறியலாகவும், கதராடையாகவும் பரிணமித்திருக்கின்றன.

தேசபக்தர் சிறைபுகுவதனால் தேசத்தின் பந்தம் நீங்கும் என்ற உண்மையைத் திலகர் பெருமான் ஒரு முறைக்கு மும்முறை சிறை புகுந்து விளங்க வைத்தார். அன்று ஒரு திலகர் சிறை புகுந்தமையாலன்றோ, இன்று இருபத்தையாயிரம் திலகர் சிறை புகுந்திருக்கின்றனர்? முதல் முதல் சிறை வழி காட்டிய பெருமானும் திலகர் பெருமானே யாவர்.

கோகலேவிடுத்த அறிக்கைகளுக்குத் திலகர் பெருமான் விடுத்த பதில் அறிக்கைகளை வாசிப்போர்க்கு அவர் மனம் ஒத்துழைப்பில் பதிந்து கிடந்ததா அல்லது ஒத்துழையாமையில் பதிந்து கிடந்ததா என்பதுவிளங்கும்.

மாண்டேகு-செம்ஸ்பர்ட் சீர்திருத்தத்தை ஏற்றுக்கொள்வதில் திலகர் பெருமான் ஒத்துழைப்பைக் காட்டினார் என்று சிலர் கருதலாம். சீர்திருத்தத்தைப்பற்றி அவர் வெளியிட்ட அபிப்பிராயங்களையும், "அரசாங்கத்தார் எவ்வளவு தூரம் உண்மையாக ஒத்துழைக்க விரும்புகிறாரோ அவ்வளவு தூரம் நானும் அவரோடு ஒத்துழைப்பேன்" என்று கூறிக்கொண்டிருந்ததையும் உற்று நோக்குவோர் திலகர் பெருமான் மனோ நிலையை உணரக்கூடும். திலகர் பெருமான் விண்ணுலக வாழ்வை எய்தும் வேளையில் காந்தியடிகளை நோக்கி "தேசத்தை உம்மிடத்தில் ஒப்புவிக்கிறேன்" என்னுங் கருத்துப்பட வழங்கிய உரைகளும் கவனிக்கற்பாலன.

திலகர் பெருமான் அரசியல் வாழ்வே ஒத்துழையா வாழ்வாகும். அவர் தன்னந் தனியராய் அனுஷ்டித்துக் காட்டிய ஒத்துழையாமை, இப்பொழுது தேசத்தில் பெரும் பகுதியினர் ஒத்துழையாமையாகக் கூர்ந்து விளங்குகிறது. திலகர் பெருமான் அரசியல் தொண்டில் தலைப்பட்ட நாள் தொட்டு, இவ்வுலக வாழ்வை நீத்த நாள் வரை ஒத்துழையாதாராகவே வதிந்து தேசத்தை ஒத்துழையாமைக்குப் பண்படுத்தினர். காந்தியடிகள் பஞ்சாப் படுகொலைக்கும் கிலாபத்துக்கும் நியாயம் பிறவாமை கண்டு ஒத்துழையாமை அனுஷ்டிக்க முந்தினர். ஆதலால் காந்தியடிகளுக்கு முன்னரே திலகர் பெருமான் ஒத்துழையா விரதந் தாங்கினவர் என்பது எமது அபிப்பிராயம்.

இப்பொழுது - திலகர் புகழுடம்பு எய்திய இந்நாளில் - சிலர் திலகர் ஒத்துழைப்பைவிரும்பினவர்என்று கூறுவது தேசத்தை வஞ்சிப்பதாகும். இவர் கூற்றுப்படி திலகர் ஒத்துழைப்பை விரும்பினவர் என்றே வைத்துக்கொள்வோம். இப்பொழுது அவர் இருப்பின், எவ்வியக்கத்தில் சேர்ந்திருப்பர் என்பதை எவரால் கூற முடியும்? அரசியல் போக்கே என்றும் மாறுதலடைந்து வருவது. இன்றைக்கு ஒருவர் சில காரணம் பற்றி ஒரு கட்சியை ஆதரிப்பர். அவரே நாளைவேறு காரணம் பற்றி வேறு கட்சியில்சேருவர். பண்டிதமதன்மோகன் மாளவியா ஒத்துழையாமையைவெறுத்துக் கொண்டிருந்தார்; இப்பொழுது ஒத்துழையாமையைப் போற்றுகிறார். அன்னிபெசண்ட் அம்மையார் அடிக்கடி தமதுமனப்போக்கை மாற்றிக்கொள்கிறார். டாக்டர் நாயர் தேசியக் கட்சியைவிடுத்து ஜஸ்டிஸ் கட்சியைத் தோற்றுவித்தார். இப்பொழுது-லாயிட்ஜார்ஜ்பேச்சுஊர்வலம் வரும் இக்காலத்தில் - டாக்டர் நாயர் உயிருடனிருந்தால் எக்கட்சியில் சேர்வரோ? இறந்துபோனவர்கள் ஒரு காலத்தில் - அப்பொழுது தேசநிலை உன்னி-வெளியிட்ட அபிப்பிராயங்களை, இப்பொழுது - தேசநிலை மாறுபட்டு வரும் இந்நாளில் - எடுத்துக் காட்டுவது தேசத்தை ஏமாற்றுவதாகும்.

திலகர் பெருமான் உயிருடன் வாழ்ந்த காலத்திலும், அவர் ஒத்துழைப்பை நாடி ஓடினார் என்று கூறப் போதிய ஆதாரமில்லை. திலகர் பெருமான் சென்னைக் கடற்கரையில் ஒரு முறை பேசிய போது "அரசியல் ஞானமாவது பல நூல்களை வாசித்துப் பெறும் ஞானமன்று; அந்நூலுணர்ச்சியால் பெரும்பான்மையோர்வழித் தேசத்தை நடத்துவது" என்று குறிப்பிட்டிருக்கிறார். பெரும்பான்மை வழி ஒழுகும் அறத்தைக் கடைப்பிடித்த திலகர் பெருமான் காங்கரஸ் கொள்கைக்கு ஒரு நாளும் மாறுபட்டு நிற்கமாட்டார். ஆதலால் திலகர் மனமும் காந்தியடிகள் தற்போது அனுஷ்டித்துவரும் ஒத்துழையா முறையும் ஒன்றுபட்டனவேயாம். திலகர் பெருமான் ஒத்துழைப்பை நாடினவர் என்று கூறுவோர் தங்கருத்தை வெளியிடுபவரேயாவர். ஒத்துழையாமையில் திலகரே காந்தி, காந்தியே திலகர் என்று நாம் போற்றுகிறோம்.

திலகரைப் போற்றுவோருட் சிலர் ஒத்துழையா முறைகளில் அபிப்பிராயபேதங் காட்டுவது உண்மையே. முறைகள்மாறுபட்டால் ஒத்துழையாமூலம் கேடுறுமோ? ஒத்துழையாமையை அடிப்படையாகக் கொண்டு முறைகளை அவரவர் விருப்பப்படி அனுஷ்டிக்கலாம். ஆனால் காங்கரஸ் குறிப்பிடும் முறைகளைப் பின்பற்றி நடக்கவேண்டு மென்பது எமது கொள்கை.

## காந்தியடிகளின் திருநாள்

காந்தி யடிகள் சிறைச்சாலைக்குச் சென்று இன்றோடு நூற்றறுபத்திரண்டு நாட்களாகின்றன. இன்று ஐந்தாவது மாதம் முடிந்து ஆறாவது மாதம் பிறக்கிறது. இந்த ஐந்து மாதங்களில் நாம் என்ன செய்தோம், தாய்நாட்டின் விடுதலைக்காக நாம் எந்த விதமான தியாகத்தைச் செய்திருக்கிறோம் என்று தமிழ் நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் தங்களைத் தாங்களே கேட்டுக்கொள்ள வேண்டுமென்று விரும்புகிறோம். ஒவ்வோர் இந்தியரும் தமது கரத்தைத் தமது இதயத்தின் மீது வைத்துப்பார்த்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம். காந்தியடிகள் ஏன் சிறைச்சாலைக்குச் சென்றார், எப்பொழுது சென்றார், எப்படிச்சென்றார் என்பதை ஆராய்ந்து பார்த்தால் நமது நிலை, இந்தியாவின்நிலை முதலியன நன்கு புலனாகும். அஹிம்சா தர்மத்தை இந்தியாவுக்கு மாத்திரமன்றி உலகத்திற்கே போதித்து வந்த ஒரு பெரியாரை, தியாகத்தினாலேயேபொறுமையினாலேயே சத்துருக்களையும் வென்றுவிடலாம் என்ற ஓர் அரிய தத்துவத்தை உலகிற் குணர்த்திய அன்பரைச் சிறைக்கனுப்பிவிட்டு நாம் வாளாவிருந்தால் வருங்காலம் நம்மை என் சொல்லாது? நமது சந்ததியார் நம்மைத் தூற்றாமலிருப்பரோ? இதை ஒவ்வோர் ஆண் மகனும் பெண் மகளும் சிந்திக்க வேண்டும்.

'காந்திக்கு ஜேய்' என்று கூவிவிட்டால் நாம் காந்தியடிகளைப் பின் பற்றியவராக மாட்டோம்; காந்தியடிகள் சிறந்த பெரியார், பொறுமையாளர், உயரியஞானி என்று வாய்ப்பந்தர் போடுவதனால் நாம் அவருக்கு நன்றிசெய்தவராகக் கருதப்படமாட்டோம். சிறைக்குச் சென்ற சின்னாட்களுக்குள் அப்பெரியார் பத்துபவுன் நூலை நூற்றார் என்று சொல்லி அகமகிழ்ந்து நிற்பதால் நாம் தேசத்தொண்டு செய்தவராக மாட்டோம். ஒவ்வொருவரும் அவர் கூறியபடி நடக்க வேண்டும். சுதேசியத்தை அநுஷ்டிக்க வேண்டும்; தீண்டாமையை அகற்றவேண்டும்; மதுபானத்தை ஒழிக்க முயல வேண்டும்; அஹிம்சா தர்மத்தைக் கடைப்பிடித்தொழுகவேண்டும். இவைகளை அநுஷ்டானத்தில் கொண்டு வராமல் வாய்ப்பேச்சு பேசுவதனால் மட்டும் பயனில்லை. இவைகளை அநுஷ்டிப்பதனால் சுயஆட்சி வந்துவிடுமா என்று கேட்பதற்குஇதுகாலமன்று; தருக்கம்செய்து அறிவையும்காலத்தையும்பாழ்படுத்துவதற்கும் இது சமயமன்று. இந்தியாவின்மானத்தை, இந்தியாவின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டிய இத்தருணத்தில் நாம் ஜாதிச் சண்டையிலும் மதச் சண்டையிலும் கட்சிபேதங்களிலும் காலத்தைச்செலவழிப்பது அறியாமையாகும். இதுகாறும் வாளா கிடந்த அன்பர்கள், இனியேனும், இன்று முதலேனும், காங்கிரஸ் நிர்மாணதிட்டத்தைத் தீவிரமாகஅநுசரிப்பது மன்றிப் பிறரையும் அநுஷ்டிக்குமாறு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம். இன்று புண்ணியநாள்; எவராலும் போற்றப்படவேண்டிய நாள்; காந்தியடிகளின் அரிய தியாகத்தை நினைக்கவேண்டிய நாள். இதைஎவரும் மறத்தல்கூடாது. இந்தப் புண்ணியதினத்தை நாம்போற்றுகிறோம்; வாழ்த்துகிறோம்.

தமிழ்நாட்டார் இன்றுமுதலேனும் தங்களது உறக்கத்தினின்று எழுந்திருப்பரோ?

## ஸ்ரீமான் ஆர்தர் கிரிப்பித்ஸ்

ஐர்லாந்து ஷின்பீன் இயக்கத்தின் முதன் மணியாக இலங்கி வந்த ஸ்ரீமான் ஆர்தர் கிரிப்பித்ஸ் சென்ற வாரம் விண்ணுல கடைந்து விட்டார். ஐர்லாந்து தேசிய இயக்கத்து அடிமரத்தின் ஒரு பகுதியானது அற்றுப் போய்விட்டது என்று கூறலாம். ஆங்கிலோ-ஐரிஷ் உடன்படிக்கை ஏற்பட்டதற்கு முன்னர், ஷின்பீன் இயக்கத்திற்கு ஸ்ரீமான் தவேலரா தலைவராக இருந்து வந்த போதிலும், ஸ்ரீமான் கிரிப்பித்ஸே, அவ்வியக்கத்தை பண்பட்ட நிலைக்குக் கொண்டு வந்தவராவார். "ஷின்பீன் இயக்கத்தின் மூளை" என்று ஸ்ரீமான் கிரிப்பித்ஸைக் கூறுவது வழக்கம். ஸ்ரீமான் கிரிப்பித்ஸ் பன் முறை பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் சிறையில் வைக்கப்பட்ட பெரும் பாக்கியத்தைப் பெற்றிருந்தார். இவர் சிறந்த அரசியல் நிபுணராயிருந்ததுடன் உயர்ந்த கவிவாணராகவும் இலக்கியப் புலவராகவும் விளங்கிவந்தார். ஐர்லாந்தின் தேசிய உணர்ச்சியைத் தம் பத்திரிகை மூலமாக ஒரே நிலையில் வைத்திருந்தார். ஆங்கிலோ ஐரிஷ் உடன்படிக்கை நிறைவேற்றப்பட்ட பிறகு தெயில் - ஏரன் சபையின் தலைமைப் பதவியினின்று ஸ்ரீமான் தவேலரா நீங்கியதும் ஸ்ரீமான் கிரிப்பித்ஸே அப்பதவிக்கு நியமிக்கப்பட்டார். தமது நாட்டின் தேசிய கௌரவத்தைக்காப்பாற்ற வேண்டுமென்ற நோக்கத்துடன் இவர் ஆங்கிலோ ஐரிஷ் உடன்படிக்கையில் கலந்துகொண்டு தீவிரமாக



உழைத்ததை எவரும் மறந்திருக்கமாட்டார். ஐர்லாந்து ஒன்றுபட வேண்டிய காலத்தில், பிளவுகள் நேர்ந்தமைக்காக இவர் மனவருத்தமடைந்து கொண்டிருந்தார் என்று சொல்லப்படுகிறது. ஸ்ரீமான் கிரிப்பித்ஸ் எந்நோக்கத்துக்காக ஆதிமுதல்உழைத்தாரோ அந்த நோக்கம் நிறைவேறிக் கொண்டு வருங்காலத்தில் அவர் இறந்துபோனது பெரிதும் வருந்தத்தக்கது. இவரைப் பிரிந்து வருந்திக் கொண்டிருக்கும் ஐர்லாந்துக்கு எமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். இனியேனும் ஐர்லாந்தின் உள்நாட்டுச் சண்டை ஒழியுமோ?

## இடியேறு

### லார்ட் நார்த் கிளிப்

பத்திரிகை உலகத்தில் நபோலியன் என்று அழைக்கப்பட்டு வந்த லார்ட் நார்த் கிளிப் இறந்து போய் விட்டார். 'டேயிலி டேலிகிராப்' என்ற பத்திரிகையில் முதன் முதலாக ஒரு ரிபோர்ட்டராக அமர்ந்து படிப்படியாக இவர் முன்னேறினர். இவர் பல பத்திரிகைகளுக்குச் சொந்தக்காரராகிப் பெரும்பணம் சேர்த்தார். இவர் சமீபத்தில் இந்தியாவில் சுற்றுப் பிரயாணம்செய்து இந்தியருக்கு விரோதமான சில அபிப்பிராயங்களை வெளியிட்டார் என்பதை நேயர்கள் மறந்திருக்கமாட்டார்கள். இந்தியர்களிடத்தில் நல்லெண்ணம் கொள்ளாத இவருடைய மரணத்தால், குறுகிய நோக்கமுடைய பலர் வருந்துவர்.

### டாக்டர் வரதராஜுலு

திருப்பூரில் கூடப்போகும் தமிழ் நாட்டு மகாநாட்டுக்கு எவரை அக்கிராசனராகத் தெரிந்தெடுப்பது என்பதைப்பற்றிப் பலவித அபிப்ராய பேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. சாரதாபீடம் சங்கராச்சாரியார், சேலம் ச. இராஜகோபாலாச் சாரியார், டாக்டர் வரதராஜுலு நாயுடு ஆகிய இம்மூவர் பெயர்கள் குறிக்கப்பட் டிருக்கின்றன. ஸ்ரீ சங்கராச்சாரியார்தமிழ்நாட்டவராயினும், இப்பொழுது அவர் தமிழ் நாட்டோடு தொடர்பின்றி வாழ்தலால், அவரைத் தெரிந்தெடுப்பது எமக்கு உசிதமாகத் தோன்றவில்லை. சேலம் ச. இராஜகோபாலாச் சாரியார் அக்கிராசன பதவிக்கு எல்லா வழியிலுமுரியர். ஆனால் அவரைத் தெரிந்தெடுத்தாலும் அவர் இசையமாட்டார் என்று அறிகிறோம். ஆதலால் சமீபத்தில் சிறையினின்றும் விடுதலையடைந்த டாக்டர் வரதராஜுலு நாயுடுவைத் தெரிந்தெடுப்பது உசிதமென்று எமக்குத் தோன்றுகிறது.

### நேற்றைய கூட்டம்

நேற்றுச் சென்னை விக்டோரியா டவுன் ஹாலில், பிரதம மந்திரியார் பேச்சைப்பற்றி யோசிக்கக் கூடிய கூட்டம் மிக நன்றாகநடைபெற்றது. அதில் பல அரசியல் கட்சியினர் ஒன்றுபட்டுப் பேசியதைக் குறித்து மகிழ்வெய்துகிறோம். ஆங்கே நிறைவேற்ற எடுத்துக்கொள்ளப்பட்ட தீர்மானம் பிரதம மந்திரியார்பேச்சைச் சென்னைவாசிகள் எவ்வழியிலும் அங்கீகரிக்கவில்லை என்னுங்கருத் தடங்கப்பெற்றது. ஸ்ரீமான் வி. எல். சாஸ்திரியார் பிரதமமந்திரியார் கரவற்ற வார்த்தைக்கு நன்றி கூறுவதாகவும் எல்லாரும் காங்கரஸில் அங்கத்தவராகச்சேரவேண்டுமென்றும் ஒருதீர்மானங்கொண்டுவந்தார். சபா நாயகர்சாஸ்திரியார் தீர்மானத்தைத் தடுத்து முதல் தீர்மானத்தைப்பற்றிப் பேசுமாறு சாஸ்திரியாரைக் கேட்டுக் கொண்டார். அதற்கிணங்கிப் பேசப் புகுந்த சாஸ்திரியார் தமது தீர்மானத்தை நீட்டிவிட்டார். அதனால் பிளவு ஏற்பட்டது. முதல் தீர்மானத்திற்கும் சாஸ்திரியார் தீர்மானத்திற்கும் உள்ள வேற்றுமை என்னே தெரியவில்லை! அவ்விரண்டும் மொழிகளில் வேறுபட்டிருக்கின்றனவே யன்றிப் பொருளில் வேறுபட்டிருப்பதாகத் தெரியவில்லை. ஸ்ரீமான் வி. எல். சாஸ்திரியார் தலையிட்டதால் விளைந்த தென்னை? முதல் தீர்மானம் தோல்வியுற்றதனால் விளைந்த நலமென்னை? ஒத்துழையாமையில் மனஞ்செலுத்த விரும்பு சிலர் மனம் புண்பட்டதே விளைந்த பயன். ஸ்ரீமான் வி. எல். சாஸ்திரி கூட்டங்களில்திடீரென இத்தகைக் கூத்தாடி விடுகிறார். அவர்க்கு அதில் ஆனந்தம். பத்திரிகையில் பெயரளவில்ஒத்துழையாதாராக இருப்பவரைப் பார்க்கிலும் கதராடை தரிக்கும் மிதவாதி உண்மையாகத் தேச சேவை செய்பவர் என்பதை விரித்தெழுத இடமில்லை.

### அதிகாரவர்க்கத்தினரின் பெருமை

கன்னட ஜில்லாவில் கோகர்ணம் என்ற ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. இது பெரிய யாத்திரைஸ்தலம். இங்கு ஒரு நகரபரிபாலன சபை ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. சமீபத்தில் இந்நகரசபையார்யாத்திரா காலத்தில் ஒருவித மானவீட்டு வரி விதித்தனர். இந்த வரியைக் கொடுக்கஅந்நகரவாசிகள்மறுத்துவந்தார்கள். இதை மனதில் வைத்துக் கொண்டு ஜில்லா கலெக்டர், அவ்வூர்சுகாதாரச்செலவுக்கென்று அரசாங்கத்தார் அளித்திருந்த7357ரூபாயைக் கொடுக்கமறுத்துவிட்டனர். அரசாங்கத்தார் அளித்த சுகாதாரச் செலவுக்கும், ஜனங்களுடைய வரிமறுத்தலுக்கும் என்ன சம்பந்தம் என்பது தெரியவில்லை. அவ்வூர் கோயில்தர்மகர்த்தர்கள், தங்கள் கோயிலைப்பழுதுபார்க்க மரம் வெட்டிக் கொள்ளக் கலெக்டரை அநுமதி கேட்டனர். ஆனால், தர்மகர்த்தர்கள் தவிப்பட்ட முறையில் வரி கொடுக்க மறுப்பதனால் மரச் சாமான்களை உபயோகித்துக் கொள்ள கலெக்டர் அநுமதி மறுத்து விட்டனர்! எதற்கும் எதற்கும் சம்பந்தம்!!

### விலகுவார்களோ?

ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் செய்த உபந்நியாசத்தைக் கேட்டு இந்தியா அரசாங்கத்து நிருவாக சபையின் இந்திய அங்கத்தினர்களும் மந்திரிமார்களும் ஏன் ராஜிநாமா செய்யவில்லை என்று ஓர் அன்பர் கேட்கிறார். ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜின் உபந்நியாசம், 1917-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் கொடுக்கப்பட்ட உறுதிமொழியை மாற்றுவதாயிருக்கிறதென்று இவர்கள் அபிப்பிராயப்பட்டால் இவர்கள் தங்கள் பதவிகளினின்று விலகுவார்கள் என்று மற்றோர் நண்பர் பதிலிறுக்கிறார். எங்ஙனமிருந்தபோதிலும் சுயமரியாதையுள்ளோர் விரைவில் சுய ஆட்சி பெற மும்முரமான முயற்சிகளைச் செய்வர். அஃதில்லாதார்—?

### பகட்டு

ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ், சமீபத்தில் காமன்ஸ் சபையில் செய்த உபந்நியாசத்தைச் சிறிது மழுப்பிப் பேசியிருக்கலாமென்றும் அவர், தம் கருத்துக்களை வெளிப்படையாகக் கூறியதனாலேயே இந்தியர் அவருடைய உபந்நியாசத்தை வெறுக்கின்றனர் என்றும் பொருள் படும்படி 'பயோனீர்' பத்திரிகை எழுதுகிறது. எனவே, ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் செய்த உபந்நியாசத்தின் கருத்துகளை இப்பத்திரிகை அங்கீகரிப்பதாகவே தெரிகிறது. இத்தகைய பத்திரிகைகள் இந்தியாவுக்கு கலஞ்செய்கின்றனவாம்!

### உதவி வேண்டுகிறார்

ஸ்ரீமான் சங்கரன் நாயர்மீது ஸர் மைக்கல் ஓட்வியர் வழக்குத் தொடுத்திருக்கிறார் என்பது நேயர்களுக்குத் தெரியும். இந்த வழக்குச் சம்பந்தமாகத் தமக்கு வேண்டும் உதவிகளைச் செய்யும்படி அவர் காங்கிரஸ் மகா சபையைக் கேட்டுக்கொண்டிருக்கிறார் என்று அறிகிறோம். ஸ்ரீமான் சங்கரன் நாயருக்கு உதவி செய்வது ஒத்துழைப்புக்கு உதவிசெய்வதாகும்; ஒத்துழைப்பை நாடுவதாகும். ஆனால் 'காந்தியும் அராஜகமும்' என்ற நூலை ஏன் எழுதினோமென்பதை இப்பொழுதாவது ஸ்ரீமான் சங்கரன் நாயர் உணர்கிறாரா வென்பதை அறிய விரும்புகிறோம். 'முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்' என்ற முதுரையை ஸ்ரீமான் நாயருக்கு இச்சமயத்தில் ஞாபக மூட்டாமல் இருக்க முடியவில்லை.

### சர்வ கலாசாலை மசோதா

சென்னைச் சர்வ கலாசாலையைச் சீர்திருத்தி அதனைப் புதிய முறையில் அமைக்க வேண்டுமென்று கல்விமந்திரியாகிய ஸ்ரீமான் பாத்ரோ ஒரு மசோதாவைத் தயாரித்து வெளியிட்டார். இதனைப்பற்றிச் சென்னை சர்வ கலா சங்கத்தார் ஆலோசித்து மாகாணத்தின் வேறு இடங்களில் சில சர்வ கலாசாலைகள் ஆரம்பமாவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டு பிறகு சென்னைச் சர்வகலாசாலையை ஏற்படுத்தவேண்டுமென்று பொருள்படத்தக்க விதமாக ஒரு தீர்மானம் நிறைவேற்றிவிட்டனர். இதனால், கல்வி மந்திரியார் தமது மசோதாவை இந்தத் தீர்மானத்திற்கு இணங்கமாற்றி அமைக்கவேண்டும். அவர் என்ன செய்யப் போகிறாரோ தெரியவில்லை. ஆனால் எத்தனை சர்வ கலாசாலைகளை ஏற்படுத்தின போதிலும், இந்தியருக்குத் தேசிய உணர்ச்சி புகட்டாத கல்வியை நாம் பாராட்ட மாட்டோம்.

### விநோத ஆசிரியர்

திரிசிராப்பள்ளி சென்ட்ஜோசப் காலேஜ் ஹாஸ்டலில்படிக்கும் சுமார் நூறு பிராமண மாணவர்களை, ஆவணி அவிட்டம் கொண்டாடக் கூடாதென்று அந்த ஹாஸ்டல் அதிகாரிதடுத்துவிட்டதாக அறிகிறோம். இதன் பயனாக இவர்கள் தங்கள் ஐபங்களை ஹாஸ்டலுக்கு வெளியேசென்று முடித்துக்கொண்டார்கள் என்று தெரிகிறது. இந்த மாதம் முதல்தேதி திலகரின் உருவப்படம் ஊர்வலமாக எடுத்துச்செல்லப்பட்டது. இந்த ஊர்வலம், மேற்படி கல்லூரியைச்சேர்ந்த கிளைவ் ஹாஸ்டல்பக்கமாகச் சென்றது. இதைக் கண்டு, அந்த ஹாஸ்டல் மாணவர்கள் 'திலக்மகாராஜுக்கு ஜெய' என்று சந்தோஷ ஆரவாரம் செய்தார்கள். உடனே ஹாஸ்டல் அதிகாரி, எந்த ஊர்வலத்தைக் கண்டும் மாணவர்கள் சந்தோஷக் கூச்சலிடக்கூடாதென்று உத்தரவிட்டு விட்டார். இந்த ஹாஸ்டல் அதிகாரியை ஒரு சிறந்த வைத்தியர் பரிசோதித்தல் நலமென்று விரும்புகிறோம்.

### காந்தி குல்லாய்

திருப்பூரிலுள்ள ஹார்வி அண்ட் கம்பெனியைச் சார்ந்த ஸ்ரீமான் ஜென்கின்ஸ் என்ற ஓர் ஐரோப்பியருக்கு அவ்வூர் வாசிகளிற் சிலரால் ஒரு விருந்து நடத்தப்பட்டது. விருந்து நடைபெற்ற பிறகு புகைப் படம் பிடிக்கப்பட்டது. அதில் காந்தி குல்லாய் தரித்திருந்தவர் உட்காரக்கூடாதென்று ஸ்ரீமான் ஜென்கின்ஸ் ஆக்ஷேபித்தார். இதன் பயனாகச் சுமார் பன்னிரண்டு பேர் புகைப்படத்திற்கு அமராமல் வெளிவந்து விட்டனராம். இது விநோதமாகவே இருக்கிறது. காந்தி குல்லாய் தரித்திருப்பவரோடு சமமாக உட்கார்ந்து புகைப் படம் எடுத்துக்கொள்வது தமக்கு அகௌரவமாயிருக்கிறதென்று ஸ்ரீமான் ஜென்கின்ஸ் நினைத்தார் போலும்! இத்தகைய எண்ணங் கொண்டவரோடு உட்காருவது தங்களுக்கு அகௌரவமென்று நினையாமல் சில இந்தியர்கள் அவருடனிருந்து புகைப்படம் பிடித்துக் கொண்டதற்காக வருந்துகிறோம்.

### ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜின் உபந்நியாசம்

ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் உபந்நியாசத்தைக் கண்டித்து இந்திய சட்டசபையில் ஸ்ரீமான் வேங்கடபதி ராஜு ஒரு தீர்மானம் கொண்டு வரப் போகிறார். சென்னைச் சட்ட சபையிலும் ஸ்ரீமான் சி. நடேச முதலியாரும் வேறோர் அங்கத்தினரும் தீர்மானங்கள் கொண்டு வரப் போகிறார்கள். இந்தத் தீர்மானங்களினால் என்ன பயன் உண்டாகும் என்பது நமக்குத் தெரியவில்லை, ஆனால் இத்தீர்மானங்களை எத்தனை பேர் ஆதரிக்கின்றனர், எத்தனை பேர் எதிர்க்கின்றனர் என்பதைக் கொண்டு சட்டசபையிலுள்ள உண்மை இந்தியர்களுடைய தொகையை எண்ணி விடலாம்.

### இந்தியாவின் பிரதிநிதி?

சர்வதேச சங்கத்திற்கு இந்தியாவின் பிரதிநிதியாக ஸ்ரீமான் சிவசாமி ஐயருடன் லார்ட் செம்ஸ்பர்டும் நியமிக்கப்பட் டிருக்கிறார். இந்த அரியதேச சேவையை ஏற்றுக்கொண்ட லார்ட் செம்ஸ்பர்டை நாம் பாராட்டுகிறோம், லார்ட் செம்ஸ்பர்டின் நியமனத்திற்கு இந்தியா சம்மதப்படுகிறதா இல்லையா என்பதை ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் கவனித்தாரா என்று சிலர் கேட்கக்கூடும். ஆனால் சட்டசபையே தம் விருப்பப்படி நடைபெற வேண்டுமென்று கூறும் ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் லார்ட் செம்ஸ்பர்டை இந்தியாவின் பிரதிநிதியாக நியமித்ததற்காக நாம் ஆச்சரியப்படவில்லை. ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் எதை வேண்டுமானாலும் செய்யலாம். ஒத்துழைப்போருக்கு நல்ல சன்மானங்கள் கிடைத்துக் கொண்டு வருகின்றன. லார்ட் செம்ஸ்பர்ட் சர்வ தேச சங்கத்தில் இந்தியாவின் பிரதிநிதியாக அமரும்போது ஜலியன் வாலா படுகொலையை நினைத்துக்கொள்ள வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம்.

### சென்னை நியாயவாதிகளின் உறுதி

சென்னை ஹைகோர்ட் கட்டிடத்தில் நியாயவாதிகள் பண்டித மோதிலால் நேரு முதலியவர்களுக்கு ஒரு விருந்தளித்தனர் என்பதையும் அதைக்கண்டித்து நீதிபதிகள்நியாயவாதிகள் சங்கத்தாருக்குஓர் அறிக்கை விடுத்தனர் என்பதையும் நேயர்கள் அறிவார்கள். இதுகாலை, நியாயவாதிகள் சங்கத்தார் மேற்படி கண்டனத்துக்குப் பதில் அனுப்பியிருக்கின்றனர். அதில், தங்களிடமிருந்து விஷயங்களைத் தெரிந்துகொள்ளாமல் வக்கீல் சங்கத்தாருடைய இடத்தைக் காலி செய்து விட வேண்டுமென்று நீதிபதிகள் கூறியது விநோதமாயிருக்கிறதென்றும், வக்கீல்கள் சங்கம் அரசியல்சங்கமல்லாத போதிலும் அரசியல்விவகாரங்களைக் குறித்து வாதிக்க வேண்டியிருக்கிறதென்றும் ஆதலின் இனி அரசியல் சம்பந்தமான கூட்டங்கள் கூட்டுவதில்லையென்று நீதிபதிகள் கேட்கும் உறுதிமொழி கொடுக்க முடியாதென்றும் தெரிவித்திருக்கின்றனர் என்று அறிகிறோம். சென்னை நியாயவாதிகளின் தைரியத்தை நாம் பாராட்டுகிறோம். இக்கடிதத்தின் முழு விவரம் வந்த பிறகு நாம் விரிவாக எழுதுவோம்.

### சிக்கனம்!

பம்பாய் வைத்திய இலாகாவில் அதிக சிக்கனம் செய்ய வேண்டுமென்று அதிகாரிகள் நினைத்து விநோதமாக நடந்துகொள்கிறார்கள். பம்பாயிலிருக்கும் இரண்டு ஆஸ்பத்திரிகளிலுள்ள சுமார் முந்நூற்றைம்பது நோயாளிகளைச் சிக்கனம் காரணமாக ஆஸ்பத்திரி சூபரின்டென்டெண்ட் வெளியே அனுப்பி விட்டார். வரவை விட செலவு அதிகமாயிருக்கிறதென்றும் இதற்காக என்ன செய்யலாமென்றும் வரவு செலவு திட்டத்தின்படி நடந்துகொள்வதாயிருந்தால் சுமார் எண்பது நோயாளிகளையே வைத்துக் கொண்டிருக்க முடியுமென்றும், இதைப் பற்றி அதிகாரிகளின் உத்தரவு ஒருவாரத்திற்குள் வராவிட்டால் நோயாளிகள் வெளியேற்றப்படுவோர்களென்றும் மேற்படிஆஸ்பத்திரிகளின்சூபரின்டென்ட்சர்ஜன்ஜெனரலுக்கு எழுதினாராம். சர்ஜன்ஜெனரல்மந்திரிக்கு அனுப்பி அவருடைய உத்தரவை அனுப்புவதற்குள் ஒரு வாரமாகி விட்டதால் சூபரின்டென்ட் பலரை ஆஸ்பத்திரியினின்று வெளியேற்றிவிட்டார். இதை அறிந்த மந்திரியார் இந்த முறையை நிறுத்த வேண்டுவன செய்தனராம். அதிகாரிகளின் சிக்கனம் எவ்வளவு விநோதமான முறையில் நடைபெறுகிறது!

### மௌலவி மஷ்ருல்ஹக்

பங்கிபூர் சிறையில் பக்ரீத்பண்டிகையைக் கொண்டாடுவதற்காக மௌலானா விலியாஸ் என்பவர் வரவழைக்கப்பட, அன்னார் பக்ரீத்பண்டிகை விஷயமாக முஸ்லிம்கள் நடந்துகொள்ள வேண்டியதைப்பற்றி எடுத்துச் சொல்லிவிட்டு கலிபாகீண்ட ஆயுளுடன் இருக்கவேண்டுமென்றும் முஸ்தபாகெமால் பாட்சாவுக்கு வெற்றிகிடைக்க வேண்டுமென்றும் கடவுளை நோக்கிப் பிரார்த்தித்தார். இது முடிவடைந்த பின்னர் மௌலானா மஷ்ருல்ஹக், மௌலானாவிலியாஸை இறுகத்தழுவிக்கொண்டார். பின்னர் பெரும்பாலான கைதிகள் இருமௌலானாக்களை இறுகத்தழுவிக்கொள்ளலானார்கள். அரசியல்குற்றங்களுக்காகத்தண்டிக்கப்படாமல் வேறு குற்றங்களுக்காகத் தண்டனையடைந்திருக்கும் முஸ்லிம் கைதிகள் கடவுளை மன்னிக்கும்படியாய்க் கேட்டுக்கொள்ள வேண்டுமென்று மௌலானா மஷ்ருல்ஹக் கூறினார். தொழுகையின்போது மௌலானா மஷ்ருல்ஹக் தலையணி ஒன்றுமில்லாமல் லுங்கியையும் குர்த்தாவையும் உடுத்திக்கொண்டிருந்தார். மௌலானா தாம் அணிந்திருந்த காந்திகுல்லாயைச் சிறை அதிகாரிகள் எடுத்து விட்டதிலிருந்து வேறு குல்லாயை அணிந்து கொள்ளாமல் வெறுந்தலையராகவே இருந்து வருகிறார்.

### பதிலுக்குப் பதில் செய்ய வேண்டுமாம்

எக்கேக்க குடியேற்ற நாடுகள் ஏகாதிபத்யத்தைச் சேர்ந்த மற்றப் பிரஜைகளுக்கு நல்கும் அரசியல் உரிமைகளை இந்தியர்களுக்கு மாத்திரம் கொடாமல் இருக்கின்றனவோ அந்தந்தநாடுகள்விஷயமாகப் பதிலுக்குப் பதில் இந்தியா அரசாங்கத்தார் செய்து காட்ட வேண்டுமென்றும், அந்தந்த நாடுகளைச் சேர்ந்த பிரஜைகள் இந்தியாவில் இருப்பின் அவர்களுக்கு ஓட்டுரிமை நல்காமல் இருக்க வேண்டுமென்றும் ஒரு தீர்மானத்தை ஸ்ரீமான் பாவுரு த்தபடியா என்பார் அமிருதசால் நகரபரிபாலன சபைக்கூட்டத்தில் ஒரு தீர்மானம் கொண்டு வருவார்.

### அந்நியநாட்டுத் துணி பகிஷ்காரம் ஸ்ரீமதி பார்வதிதேவியின் உபந்யாசம்

லாலா லஜபதிராய் குமாரத்தியான ஸ்ரீமதி பார்வதிதேவி, அமிருதசரஸ் ஜலியன் வாலாபாக்கில் நடைபெற்ற கூட்டமொன்றில் பேசுகையில், துணி வியாபாரிகள் அந்நியநாட்டுத் துணிகளை விற்பனை செய்வதை விட்டுவிட வேண்டுமென்றும் இல்லாவிட்டால் ஸ்திரீகள் அத்தகைய துணிக் கடைகளுக்கருகில் மறியல் வேலை செய்ய வேண்டி வருமென்றும் சட்டசபைகளுக்கு அங்கத்தினர்களை தெரிந்தெடுப்பதில் ஜனங்கள் கலந்து கொள்ளக் கூடாதென்றும் பேசினார்.

### தேசபந்து தாஸரின் குமாரத்திக்கு விவாகம்

தேசபந்து தாஸரின் இளைய குமாரத்தியான ஸ்ரீமதி கல்யாணிதேவிக்கும் சர்சுரேந்திரநாத் பானர்ஜியின் பேரனுக்கும் கல்கத்தாவில் இம்மாதம் 17-ந் தேதியில் விவாகம் சிறப்பாக நடைபெற்றது.

### போலீசாரின் திருவிளையாடல்

தாம் இல்லாத சமயத்தில் ஒரு போலீஸ் கான்ஸ்டேபில் பாரத திலக பத்திரிகாலயத்திற்குள்நுழைந்து, தமது உத்தரவு பெறுமல் அங்கு வேலை செய்யும் பாபுராம் என்ற ஒரு கம்பாசிட்டரைப் பூக்கடைப்போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச்சென்று அன்னார் அணிந்திருந்த காந்தி குல்லாயைக் கழற்றி விடும்படியாய்க் கட்டளையிட்டு, அந்தக் காரியாலயத்தில் வேலை செய்யாமல் நின்று விடு என்று சொல்லினர் என்றும், தம்முடைய உத்தரவு பெறுமலே12-ந்தேதியபத்திரிகையொன்றைஅக் கான்ஸ்டேபில் எடுத்துச்சென்றார்என்றும்இம்மாதிரியாகவே அநேக தடவைகளில் போலீசார் உடுப்பின்றிபத்திரிகாலயத்திற்குள் நுழைந்துதொழிலாளர்களைப்பயமுறுத்திவேலையினின்று நீங்கிவிடும்படியாய்க் கட்டளையிட்டிருக்கின்றனரென்றும் சென்னையில் பிரசுரமாகும் பாரத திலக பத்திரிகாலயத்தைச் சேர்ந்த ஸ்ரீமான் அகர்வாலா 'ஸ்வராஜ்யா' பத்திரிகைக்கு அறிவிக்கின்றார்.

### சென்னை சர்வகலாசாலை

சென்னைச் சர்வகலாசாலையின் பட்டமளிப்பு விழா சென்ற புதன்கிழமை நடைபெற்றது.

## ஐக்கியம் வேண்டும்

### ஸ்ரீமான் ஜின்னாவின் வேண்டுகோள்

லோகமான்ய பாலகெங்காதரதிலகரின் ஞாபகார்த்தத்தைக் கொண்டாடுவதற்காகச் சென்ற ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீமான் எம். ஏ. ஜின்னாவின் தலைமையில் ஒருபொதுக் கூட்டம் பம்பாயில் நடைபெற்றது. அப்போது ஸ்ரீமான் ஜின்னா எங் இந்தியா பத்திரிகையின் அரசியல் ஊழியங்களையும் திலகரின் அரசியல் ஊழியங்களையும் மெச்சிப் பேசி விட்டுப் பின்னர் பேசியது வருமாறு:—

காங்கிரஸ் திட்டத்தில் மாற்றம் ஏற்பட வேண்டியது அத்தியாவசியமானது. ஏன் மாற்றம் ஏற்பட வேண்டுமென்று கூறுகின்றேனென்றால், எல்லாக் கட்சியினரும் கொண்டுள்ள சீரியநோக்கத்தை நிறைவேற்றுவதற்கேயாம். அச்சீரியநோக்கம்,விரைவில்இந்தியாசுயராஜ்யம்அடையப் பாடுவதேயாகும். அதற்காகஎல்லாக்கட்சியினரும் அபிப்பிராய பேதங்களை ஒழித்து ஒன்று சேர்ந்துகாரியங்களைச்செய்து கொண்டுபோகவேண்டும்.பிரதமமந்திரியாரின் பேச்சு, இதுவரை நாம் ஒரு படிப்பினை அறிந்து கொள்ளாமல் இருந்தாலும் இப்போது ஒரு படிப்பினையைக் கற்றுக் கொடுத்திருக்கிறது. பிரிட்டிஷ் ஆதிக்கத்தை இந்தியாவில் நாட்டிய ஐ. ஸி. எஸ். ஊழியவர்க்கத்தின்உரிமைகளைக்குறைக்கமுடியாதென்று ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ கூறியுள்ளார். இவர் இம்மாதிரி கூறியதானது பெரிதும் வருத்தத்தைக் கொடுக்கக்கூடிய தொன்றும். இப்போது நாம் அனைவரும் அதிகமாய் வேறுபட்டிருக்கிறோம். நம்மிடையில் முழு ஒற்றுமை இல்லாமல் இருந்து வருகிறது. பிரிட்டிஷ் அரசாங்கத்தார் நமக்கு உடனே சுயராஜ்யம் கொடுத்து விடப்போவதில்லை. அரசாங்கத்தார் கிலாபத் பஞ்சாப் அநீதங்களுக்குப் பரிகாரம் தேட மாட்டார்களென்று வைத்துக்கொண்டு இவைகளைத் தக்கவிதமாய் முடிவு செய்வது எப்படி என்பதைப் பற்றி ஆராய வேண்டுவது நம் கடமையாயிருக்கிறது. நாம் அனைவரும் ஐக்கியமாய் இருந்து நம்வருத்தத்தைத் தெரிவித்தால் தான் பிரிட்டிஷ் பிரதமமந்திரி தாம் பேசியதற்காக வருந்துவர். பிரதமமந்திரியின்உபந்யாசம்மடத்தனமாகுமென்று டைம்ஸ்ஆப்இந்தியா பத்திரிகைகுறிப்பிட்டிருக்கிறது. இம்மாதிரியான உபந்யாசத்தை ஸ்ரீமான்லாயிட்ஜார்ஜ்ஏன்செய்தாரென்றால்,அவர் அதிகாரத்தில் இருப்பதினாலேயேயாகுமென்று இன்னொரு பத்திரிகை குறிப்பிட்டிருக்கிறது.சீர்திருத்தங்கள் பரீட்சை அல்லது சோதனையாகுமென்றும், சீர்திருத்தங்களைச் செவ்வையாய் அநுஷ்டிக்காவிட்டால் அவைகள் திரும்பவும் பிடுங்கி விடப்படுமென்றும் அவர்சொல்லியிருக்கிறார். பிரதமமந்திரியார்உபந்யாசம் செய்கையில் தம் அதிகாரத்தையும் பொறுப்பையும் மறந்து,குறுகியநோக்கமுடையவர்களின் கையில் சிக்கிஅம்மாதிரியாகப் பேசியிருக்கிறார்.இம்மாதிரி அவர்செய்தது எதைக் காட்டுகின்றது? பிரதம மந்திரியார் விஷயங்களை மறந்து விட்டிருக்கவேண்டும், இல்லாவிட்டால்மடத்தனமாய்உபந்யாசத்தைச்செய்திருக்கவேண்டும். என்பதைக்காட்டுகின்றது. குறுகிய நோக்கமுடையவர்களின் சூழ்ச்சியினால்தான்பிரதமமந்திரியார்இத்தகையஉபந்யாசத்தைச் செய்திருக்கிறா என்று எண்ணவேண்டியதாயிருக்கிறது. பிரிட்டிஷ் பார்லிமெண்டார் 1917-ம் வருஷம் ஆகஸ்ட் மாதத்தில் கொடுத்த வாக்குறுதிக்கு முற்றிலும் மாறாக இவ்வுபந்யாசம் இருந்து வருகிறதென்பதை ஒவ்வொருவரும் ஏற்றுக்கொள்வார் என்பதில் ஐயமில்லை. இவ்வுபந்யாசம் 1919-ம் வருட சீர்திருத்த சட்டத்திற்கும் இராஜ விளம்பரத்திற்கும் முற்றிலும் மாறாய் இருக்கிறது. பிரிட்டிஷ் ஆட்சி முறை எஞ்ஞான்றும் இந்தியாவில் இருந்து கொண்டிருக்க வெண்டுமென்ற கொள்கையை ஏற்றுக்கொள்ள முடியாது. இந்தியர்களின் உதவி இல்லாமல் பிரிட்டிஷார் இந்தியாவில் அமைதியையும் சட்டத்தையும் நிலை நிறுத்தி இருக்கக்கூடுமா? நாம் அனைவரும் ஒன்று சேர்ந்து விஷயங்களை ஆராய்ந்து அதன்படி நடப்பதற்குரிய காலம் இப்போது வந்திருக்கிறது. நாம் பின்பற்றுவதற்கு இரண்டு வழிகள் தான் இருக்கின்றன. ஒருவழிஅரசாங்கத்துடன் கூடிக்காரியங்களைச் செய்து கொண்டு போதலாகும். இன்னொன்று நாமாகவே அரசாங்கச் சார்பு இன்றி உழைப்பதாகும். அரசாங்கத்தாரையே சார்ந்து இருக்கவேண்டுமென்று எண்ணுவது தவறான கொள்கையாகும். நாம் பிறரைச் சார்ந்திராமல் நாமாகவே காரியங்களைச் செய்துகொண்டு போகவேண்டும். இதற்காக ஒற்றுமை அவசியம்.

## மதுவிலக்கு மகாநாடு

சென்ற சனிக்கிழமை கனம் தி. வி. சேஷகிரி அய்யரவர்களின் அக்கிராசனத்தில் மதுவிலக்கு மகாநாடு சென்னையில் நடைபெற்றது. வரவேற்புக் கமிட்டித் தலைவரான ஸ்ரீமான் ப. சம்பந்த முதலியார் பிரதிநிதிகளை வரவேற்று இம்மாதிரியான மகாநாடுகளைக் கொண்டு வருடா வருடம் நிரந்தரமான வேலைகளைச் செய்து கொண்டு போக வேண்டுமென்று கூறினர். அக்கிராசனம் வகித்த ஸ்ரீமான் சேஷகிரி ஐயர் செய்த அக்கிராசனப் பிரசங்கத்தில் காணப்படும் முக்கிய விஷயங்களின் சாரம் வருமாறு:—

மதுவிலக்கினால் சன்மார்க்கம் உண்டாகும் என்ற ஒரு கருத்தைக் கொண்டு மாத்திரம் அதை கவனிக்கக் கூடாதென்றும் அதனால் அரசாங்க வரும்படிக்குக்குறைவு ஏற்படுமென்பதையும் கவனிக்க வேண்டியிருக்கிறதென் றும்இராஜ தந்திரிகள்கூறுகிறார்கள். அரசாங்க முறைக்குக் குந்தகத்தையுண்டாக்கும் எத்தகைய சீர்திருத்தங்களையும் கொண்டு வரக் கூடாது. மதுவிலக்கினால் அரசாங்க நிர்வாகத்திற்குக் குந்தகம் ஏற்படுமா என்பதைப் பற்றிக் கவனிக்க வேண்டியதா யிருக்கிறது. மதுவிலக்கினால் அரசாங்க வரும்படி குறைவடைகின்றது. அரசாங்க வரும்படி குறைவடைந்தாலும் ஜனங்களின் சன்மார்க்கம் விருத்தி யடைகின்றது. கலால் வருமானம் ஆண் பெண் இருபாலாரின் கெட்ட நடவடிக்கைகளினால்— அதாவது அவர்கள் குடி முதலான லாகிரி வஸ்துக்களை உட்கொண்டு உடம்பைக் கெடுத்துக் கொள்வதனால் - கிடைக்கின்றதாகின்றது. உண்மையான இராஜ தந்திரிகள் ஜனங்களை முன்னேற்றுவதில் தங்கள் கருத்தைச் செலுத்துவார்கள். பலாத்காரத்தைக் கொண்டு மதுவிலக்குப் பிரசாரம் செய்வதை நிறுத்த வேண்டும். அம்மாதிரியான பிரசாரத்தினால் நன்மை ஒன்றும் ஏற்படாது. குடியைத் தடுப்பதற்காக ஜன சமுதாய வழிகளில் பயமுறுத்தல் முதலானவைகளைக் கைக்கொள்ளலாம். மதுபானவிலக்கு சீர் திருத்தம் நாளாவட்டத்தில் நடைபெற்றுக் கொண்டு போக வேண்டும். திடீரென அரசாங்கத்துக்கு அதிகமான வரும்படிக் குறைவு ஏற்படும்படியாகவும் சீர்திருத்தம் செய்யக் கூடாது. அந்தந்த மாகாணங்கள் மதுபானவிலக்கை மேற்கொள்ளும் விஷயமாக அரசாங்க அங்கீகாரமும் சிறிது கிடைத்திருக்கிறது. மதுபான விலக்கு வெற்றியடைவதற்கு உத்தியோகத் தலையீடு இல்லாமல் இருத்தல் வேண்டும். சென்னை சட்டசபையில் மதுவிலக்கைப்பற்றி ஒரு சட்டம் கொண்டு வர விருந்ததை இந்தியா அரசாங்கத்தார் தடுத்து விட்டதானது விசனிக்கத்தக்கதாம். பின்னர் ஸ்ரீமான் பணிக்கர் மதுபானக் குடியை அடியோடு நிறுத்துவது மிகவும் அத்தியாவசியமென்று, அமெரிக்கா ஒன்று தான் சட்ட மூலமாய் மதுபானத்தை நிறுத்தியிருக்கிறதென்றும், சட்ட மூலமாய் இத்தேசத்திலும் மதுபானத்தை ஒழிக்க வேண்டுமென்றும் கூறினர்.

கீழ்வருந்தீர்மானங்கள் பின்னர்நிறைவேற்றப்பட்டன.

(1) மதுவிலக்குப் பிரசாரகரான ஸ்ரீமான் பூனேக்கால் ஜான்சன் இந்தியாவிற்கு விஜயம் செய்து அதனால் மதுவிலக்கு இயக்கத்திற்கு ஊக்கங்கொடுத்தமைக்காக இம்மகாநாட்டார் அன்னருக்குத் தங்கள் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கின்றனர்.

(2) நகர பரிபாலன சபைக்குச் சொந்தமான தென்னை மரங்களைக் கள்ளுக்கு விடுவதில்லையென்று சென்னை நகரபரிபாலன சபையார் தீர்மானித்ததற்காக இம்மகாநாட்டார் தங்கள் நன்றியை அன்னாருக்குத் தெரிவித்துக் கொள்கின்றனர்.

(3) மதுபான லைசென்சிங்போர்டில் மதுவிலக்குக்குச் சாதகமாய் இருக்கப்பட்டவர்களின் பிரதிநிதியாய் ஓர் அங்கத்தினர் மாத்திரம் நியமிக்கப்பட இருந்து வரும் விதி போதுமானதாய் இல்லாமல் இருக்கிறதென்றும் மதுவிலக்குச் சங்கங்களின் பிரதிநிதிகள் அதிகமாய் இருப்பதற்காகப் போர்டில் உத்தியோகப்பற்றில்லாதவர்களின் தொகையை அதிகப்படுத்த வேண்டுமென்றும் இம்மகாநாட்டார் சென்னை அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கின்றனர்.

(4) தினந்தோறும் மாலை 6-மணிக்குச் சரியாய் எல்லாக் கள்ளுக்கடைகளும் சாராயக் கடைகளும் மூடப்பட வேண்டுமென்ற ஓர் உத்தரவை அரசாங்கத்தார் பிறப்பிக்க வேண்டுமென்று இம்மகாநாட்டார் சென்னை அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கின்றனர்.

(5) மதுவிலக்குச் சங்கங்களும் ஜனங்களும் எங்கெந்த விடங்களில் மதுபானக் கடைகளும் சாராயக் கடைகளும் கூடாதென்று கூறினார்களோஅந்த இடங்களில் சாராயக் கடைகளையும். கள்ளுக்கடைகளையும் வைக்க லைசென்ஸிங் போர்டார் உத்தரவு கொடுத்ததை இம்மகாநாட்டார்கண்டிக்கின்றனர்.

(6) பள்ளிக்கூடங்களுக்கு அருகாமையிலும் நாடகக் கொட்டகைகள், மார்க்கெட்டுகள், தொழிற்சாலைகள் ஆகிய இவ்விடங்களுக்குச் சமீபத்திலும் உள்ள கள்ளுக்கடைகளையும் சாராயக் கடைகளையும் எடுத்து விட வேண்டுமென்று இம்மகாநாட்டார் லைசென்ஸிங் போர்ட்டைக் கேட்டுக் கொள்கின்றனர்.

(7) சென்னை பீபில்ஸ் பார்க்கில் நடைபெறும் ஆட்டங்களின்போதும் பந்தயங்களின்போதும் அவ்விடத்தில் சாராய வகைகளை விற்க லைசென்ஸ் கொடுக்கக் கூடாதென்று இம்மகாநாட்டார் லைசென்ஸிங் போர்டாரைக் கேட்டுக்கொள்கின்றனர்.

(8) மதுவிலக்குக்குச் சாதகமாய் இருக்கும் அங்கத்தினர்களையே நகரபரிபாலன சபைக்கும் சட்டசபைக்கும் தெரிந்தெடுக்க வேண்டுமென்று இம்மகாநாட்டார் சென்னை மாகாண வாசிகளைக் கேட்டுக் கொள்கின்றனர்.

### ஆச்சரியமான கொலை

இம்மாதம் 14-ந் தேதி காலையில் ஹௌராவிலிருந்து தில்லிக்குப்புறப்பட்டு வரும் ரெயில்வண்டிவர அதிலிருந்த பிரயாணிகள் அனைவரும் இறங்கியான பின்னர், வண்டியில் ஏதாவது விட்டுவிடப்பட்டுப் போயிருக்கிறதா என்பதைச் சோதிக்கும் பொருட்டு போலீஸ்காரர்கள் வண்டிகளுக்குள் நுழைந்துபார்த்தார்கள். அப்போது மூன்றாம்வகுப்பு அறையொன்றில் தகரப்பெட்டி ஒன்றிருப்பதைக் கண்டெடுத்து அதை ரெயில்வே ஆபீசில்கொண்டு போய் வைத்தார்கள். அப்பெட்டியினின்று துர்க்கந்தமும் ஒருவித எண்ணெய்க் கசிவும் உண்டாவதைக்கண்ட இரெயில்வே உத்தியோகஸ்தர்கள் அதை உடைத்துப்பார்க்க பட்டுத்துணி உடுத்திக்கொண்டிருக்கும் ஓர் இந்திய வாலிபனின்பிரேதத்தைக் கண்டார்கள். அப்பிரேதத்தின் மேல் பாகத்தில் காணக்கூடிய காயங்கள் ஒன்றுமில்லாமல் இருந்தது. இதைப்பற்றி விசாரணை நடைபெற்றுக்கொண்டு வருகிறது.

### அவமானப்படுத்தியதாக

ஆமதாபாத்தைச் சேர்ந்த கோத்ரா எனுமிடத்திய சப்ஜட்ஜ் தம் நியாய ஸ்தலத்திலுள்ள சிரஸ்ததாரை நியாய ஸ்தலத்திலேயே அடித்தாரென்பதும், அதைப் பற்றிச் சிரஸ்ததார் ஜில்லா நீதிபதிக்கு அறிவிக்க ஜில்லா நீதிபதி கோத்ரா எனுமிடத்திற்கு வந்து சப்ஜட்ஜ் சிரஸ்ததார், சில குமாஸ்தாக்கள் ஆகிய இவர்களின் சாட்சியங்களை எடுத்துக் கொண்டு போய் விட்டனர் என்பதும் நேயர்களுக்குத் தெரியும். ஜில்லா நீதிபதிதாம் எடுத்த சாட்சியங்களைப் பரிசீலனை செய்து அதன்பயனாய் அந்த நியாயஸ்தலத்தைச் சேர்ந்த பெரும்பாலானகுமாஸ்தாக்களையும் சிரஸ்ததாரையும் வேறு இடத்திற்கு மாற்றிவிட்டார்.

### ஸ்ரீ சவர்க்கார் நோயாயிருக்கிறார்

ஆமதாபாத் சபர்மதி சிறையிலிருக்கும் தம்மூத்த சகோதரரை, சவர்க்கார் சகோதரர்களில் இளைய சகோதரர் கண்டார். அவர் குடல்சம்பந்தமான நோயால் அதிகமாய்ப் பாதிக்கப்படுவதைக் கண்டு, வைத்திய உதவிக்காகத் தம் சகோதரரை விடுதலை செய்யவேண்டுமென்று இன்ஸ்பெக்டர் ஜெனராலுக்குத் தந்தி கொடுத்து கேட்டார். இத்தந்திக்குப் பதிலளிக்குமுகத்தான் அதிகாரிகள் கைதிகளைக் கவனித்து வருகிறார்களென்று இன்ஸ்பெக்டர் ஜெனரல் தெரிவித்து விட்டார்.

### ஸ்ரீ அம்பாதாஸ் தேசாயின் சத்தியாக்கிரகம்

பம்பாய் கவர்னரால் நடத்தப்பட்ட தர்பாரொன்றிற்குப் போகாமைக்காக ஸ்ரீமான் கோபால்தாஸ் அம்பாதாஸ் தேசாய் என்பாருக்குச் சொந்தமான கிராமங்கள் ஜப்தி செய்யப்பட்டன என்பதை நேயர்கள் அறிவார்கள். அன்னார் இப்போது தாசாய் எனுமிடத்திலுள்ளஜமீன் கட்டிடத்தைப்புதிய மானேஜருக்காகக் காலி செய்ய முடியாதென்று கூறுகின்றனர் என்று தெரிகிறது.

## தமிழ் மாகாண மகாநாடு

### உபசரணை சபையின் அறிக்கை

(காரியதரிசியிடமிருந்து)

தமிழ்நாடு மாகாண மகாநாட்டை அடுத்த ஆவணி மாதம் 23, 24, 25-ந் தேதிகளில் கூட்டுவதாக வரவேற்புக் கமிட்டியார் தீர்மானித்திருக்கிறார்கள். ஆகையினால் தாங்கள் உடனே பிரதிநிதிகள் தேர்தல்கள் நடப்பிவித்து, மகாநாட்டில் கவனிக்கவேண்டிய விஷயங்களைப்பற்றியும் தங்கள் கமிட்டியின் அபிப்பிராயங்களை உடனே தெரிவிக்கக் கோருகிறேன். 20-8-22 தேதிக்குள் கான்பரேன்சுக்கு அக்கிராசனர் நியமனத்தைப் பற்றித் தங்கள் கமிட்டியின் முடிவான தீர்மானத்தைத்தெரிவிக்கவேண்டுகிறேன்.

### விஷய ஆலோசனைக் கமிட்டி

கோயமுத்தூர் ஜில்லா தவிர தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வோரு ஜில்லாவிலிருந்தும் இதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட 5-பிரதிநிதிகளும் கோயமுத்தூர் ஜில்லாவிலிருந்து 10 பிரதிநிதிகளும் மாகாண காங்கிரஸ் நிர்வாக சபை அங்கத்தினர்களும் தமிழ் நாட்டு அகில இந்திய காங்கிரஸ் சமிட்டி மெம்பர்களும் வரவேற்புக் கமிட்டியின் உத்தியோக அங்கத்தினர்களும் பிரசிடெண்டு சில விசேஷ வகுப்பின் பாத்தியதைகளுக்குப் பிரதிநிதிகளாக நியமிக்கும் பதின்மரும் இக்கான்பரேன்சுக்கு விஷய ஆலோசனை சபையினராவார்கள்.

சாத்தியமானால் தங்கள் ஜில்லா டெலிகேட்கள் கான்பரேன்சுக்கு முன்னரே கூடி விஷய ஆலோசனைக் கமிட்டிக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்துத் தெரிவிக்கக் கோருகிறேன். தங்கள் ஜில்லாவில் கான்பரேன்சுக்குத் தக்க வாலண்டியர்கள் சேர்வார்களா? பள்ளிகளில் படிக்கும் சிறுவர் தேவையில்லை.

### ஸ்ரீ பி. டி. ஆஷர் சேட்

சமீபத்தில் கூட இருக்கும் சென்னை மாகாண மகாநாட்டிற்கு ஸ்ரீமான் பி. டி. ஆஷர் சேட் என்பார் உபசரணைக் கமிட்டித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

### பம்பாய் தொழிலாளர்கள் கல்லூரி

தொழிலாளர் நலத்தை முன்னிட்டு, பம்பாய் எல்பின்ஸ்டன் கல்லூரியில் தாம் வகித்திருந்த ஸ்தானத்தைவிட்டு விட்டு, பம்பாயில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் தொழிலாளர் கலாசாலையின் நிர்வாகத்தை அறிஞர் கித்வானி ஏற்றுக்கொண்டார்.

### நாடியாட் நகரபரிபாலன சபை

செப்டம்பர் முதல் தேதியிலிருந்து நாடியாட் மூலாதாரப் பள்ளிக் கூடங்களின் நிர்வாகத்தைத் திரும்பவும் நகரபரிபாலன சபையாருக்கே விட்டுவிடுவதென்று ஒருதீர்மானஞ் செய்து அதை நாடியாட் நகரபரிபாலன சபையின் தலைவருக்குப் பம்பாய் அரசாங்கத்தார் அனுப்பியிருக்கின்றனர்.

### ஸ்ரீமான் மணிலால் கோதாரி

ஸ்ரீமான் மணிலால் கோதாரி என்பார் நோய் வாய்ப்பட்டதன் காரணமாய் ஆஸ்பத்திரியிலேயே இருக்க வேண்டியதாயிற்று என்பதை நேயர்கள் அறிவார்கள். இவரைக் கச்சிலிருந்து வெளியேற்றும் நோக்கத்துடன் ஆஸ்பத்திரி பௌஜிதார் சென்ற வியாழக்கிழமை நள்ளிரவில் காரிரோகா எனுமிடத்திற்குப்பலாத்காரமாய் அழைத்துச்சென்று நகருக்குவெளியிலுள்ள தர்ம சாலையில் விட்டு விட்டார்.

### கதர் உற்பத்தி.

கதர் இலாகாவின் தலைவராக இருக்கும் சேத்ஜம்னாலால் பஜாஜ் என்பார் கதர் விருத்தியைப் பற்றிப் பின்வருமாறு அறிவிக்கிறார்:—

திலகர்சுயராஜ்யநிதியின்தர்மகர்த்தர்களிடமிருந்து ஐந்து லட்சம் ரூபா பெற்றுக்கொண்டேன். நன்கொடையாக 125000 ரூபா சேகரித்தேன். இன்னும் 50,000 ரூபா கொடுப்பதாகச் சிலர் வாக்களித்துள்ளார்கள். 17 லட்ச ரூபாய்க்கு இன்னும் பணம் சேகரிக்க வேண்டியதாயிருக்கிறது. சபர்மதியில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் கதர் வித்தியாலயத்தில் பல மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகளால் அனுப்பப்பட்ட 52 மாணவர்கள் பஞ்சைச் சுத்தம் செய்யுந் தொழிலையும் நூல் நூற்றல் தொழிலையும் துணி நெய்தல் தொழிலையும் கற்றுக்கொண்டு வருகிறார்கள். இந்த நிதியிலிருந்து சிந்து, ஆந்தரம், உத்கால் ஆகிய மாகாணங்களுக்குக் கடனாகத் தொகை கொடுக்கப்பட்டிருக்கிறது. கதர் பண்டகசாலைகள் எங்கும் ஏற்பட வேண்டியது அவசியமாய் இருக்கிறது. பம்பாயில் கதரைப்பற்றிச்சமாசாரங்களை அறிவிப்பதற்காகச் சமாசார அறிவிப்புச் சங்கம் ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.



## மதிப்புரை

### ஆத்மஞான ரத்தினம்

[சுவாமி விவேகானந்தரால் அருளிச் செய்யப்பட்டது. ஆசிரியர்: ஸ்ரீமான் சுப்பிரமணிய சிவம்; பிரசுரித்தவர்: ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தக சாலையார், பார்க்டவுன், சென்னை; விலை இரண்டு ரூபாய்; தபாற்கூலி வேறு.]

'ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளுடைய பேச்சுக்களும் எழுத்துக்களும் ஆகிய விலை மதிப்பிட முடியாத சுரங்கத்திலிருந்து' எடுக்கப்பட்ட முக்கியமான சில மணிகளை இந்த ஆத்மஞான ரத்தினம் என்னும் நூல் அடக்கிக்கொண் டிருக்கிறது. இந்த அருமையான நூலில் பல உண்மைகள் பொலிந்து விளங்குகின்றன என்று பொதுவாகக் கூற வேண்டியிருக்கிறதன்றி, எந்த விதமான உண்மைகள் இதில் அடங்கியிருக்கின்றன என்று கூற முடியவில்லை. ஒவ்வோரு புத்தகசாலைக்கும், இந்த நூலைச் சிரோமணியாக வைக்க வேண்டுமென்பது நமது விருப்பம். தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வோருவரும் இந்த நூலில் காணப்படும் உண்மை உரைகளை மனப்பாடம் பண்ணிக் கொள்ளுதல் நலம். இதனைத் தமிழ் நாட்டார் பொன்னே போல் போற்றுவாராக.

### மணிமேகலா

[அல்லது தவராஜ ரருள்பெறுஞ் சிவராஜ காட்டரசி; ஆசிரியர்: ஸ்ரீமான் மயிலை சோமசுந்தர முதலியார்; சென்னை. விலை ஒரு ரூபாய்; தபாற்கூலி வேறு.]

இந்நூல் இன்பச்சுவையையும் பத்திச்சுவையையும் அணிகளாகக் கொண்டு இலங்குகிறது. பண்டை உரைகள் மூலமாகவும் வேறு சிறந்த உதாரணங்கள் மூலமாகவும், இந்நூலில் ஆசிரியர் பல நீதிகளைப் போதித்துக் கொண்டு செல்கிறார். இதன் தமிழ் நடை பாராட்டத் தக்கதாயிருக்கிறது. இதனைத் தமிழர் வாசித்து இன்புறுவாராக.

### அரவிந்தகோஷ் கடிதங்கள்

[ஆசிரியர்: ஸ்ரீமான் பி. எக்னேஸ்வர சர்மா, கல்லிடைக் குறிச்சி; விலை ஓர் அணா; தபாற்கூலி அரையணா]

பாபு அரவிந்தகோஷ் தமது பத்தினிக்கு எழுதிய சில கடிதங்கள் இதில் அடங்கியிருக்கின்றன. இந்தக் கடிதங்களில் பல உண்மைகள் மிளிர்கின்றன. பாபு அரவிந்தரின் மனநிலை இதனின்றும் நன்கு புலப்படும். இதனைத் தமிழ் நாட்டார் அவசியம் படித்தல் வேண்டும். இந்தச் சிறிய நூல் இரண்டாம் பதிப்பாக வெளிவருங் காலத்தில், இப்பதிப்பில் காணப்படும் எழுத்துப் பிழைகள் நீக்கப்படுமென்று கருதுகிறோம்.

### ஹிந்து சாஸ்திராசயம்

[ஆசிரியர்: ஸ்ரீமான் வெ. சோமதேவ சர்மா; வெளியிட்டோர்: அமரகலாவிலாசினி சபையார்; புத்தகம் கிடைக்குமிடம்: 163, லிங்கிசெட்டி தெரு, சென்னை; விலை ஒன்றரை அணா; தபாற்கூலி வேறு.]

ஹிந்து மதத்தைச் சார்ந்த சிறு பிள்ளைகள் அறிந்து கொள்ள வேண்டிய பல விஷயங்கள் இதில் அடங்கியிருக்கின்றன. வேதம் எத்தனை, புராணங்கள் எத்தனை, இவைகளின் தன்மை என்னவென்பவைகளை அறியாத ஹிந்து மதப்பிள்ளைகளுக்கு இச்சிறு நூலைப் பாடபுத்தகமாக வைத்தல் நலம்.

### சமஸ்கிருத முதற்புத்தகம்

[ஆசிரியர்: ஸ்ரீமான் வி. ஆர். தி. தாதாசாரியார், தலைமை சமஸ்கிருத பண்டிதர், போர்ட் ஹைஸ்கூல், பட்டுக்கோட்டை புத்தகம் கிடைக்குமிடம்; பாரதிபவனம், பட்டுக்கோட்டை, தஞ்சாவூர் ஜில்லா; விலை மூன்று அணா தபாற்கூலி வேறு.]

வடமொழியைக் கற்கும் மாணவர்களுக்கு இது மிகவும் உபயோகமாயிருக்கும். இப்புத்தகத்தில் பண்டை அரசாங்க முறைகளும், அஹிம்சை, சத்தியம், தர்மம் முதலியவைகளைப் பற்றிய அரிய உரைகளும் மாணவர்கள் எளிதில் அறிந்து கொள்ள வேண்டி எழுதப்பட் டிருக்கின்றன.

### உலக சிரேஷ்டர்

[தென் காசி தாலுக்கா காங்கிரஸ் சபையாரால் வெளியிடப்பட்டது.]

மகாத்மா காந்தியைப்பற்றி அமெரிக்காவிலுள்ள ரேவரெண்ட் ஜான்ஹோம்ஸ் என்ற பாதிரியார்செய்த அருமையானபிரசங்கத்தை இந்நூல்தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கிறது. இந்நூலினின்று காந்தியடிகளின் உயர்வும், அவரைப்பற்றி மேனாட்டார் என்னவிதமான அபிப்பிராயங் கொண்டிருக்கின்றனர் என்பதும் நன்கு புலனாகும். தென்காசி காங்கிரஸ் சபையார் இத்தகைய பிரசுரங்களை வெளியிடுவது குறித்து நாம் பெரிதும் மகிழ்ச்சியடைகிறோம்.

## அந்நிய துணி பகிஷ்காரம்

[ஆசிரியர்: ஸ்ரீமான் டி. எஸ். சொக்கலிங்கம் பிள்ளை; தென் காசி காங்கிரஸ் சபையால் பிரசுரம் செய்யப்பட்டது.]

இதில் அந்நிய நாட்டுத் துணிகளைப் பகிஷ்கரிக்க வேண்டிய அவசியத்தைப்பற்றி நன்கு கூறப்பட்டிருக்கிறது.

0-2-3 ஸ்டாம்பு அனுப்புகிறவர்களுக்கு மேற்படி 2 பிரசுரங்களும், 1-0-0 ஸ்டாம்பு அனுப்புகிறவர்களுக்கு "உலக சிரேஷ்டர்" 10 பிரதிகளும், 0-3-0 ஸ்டாம்பு அனுப்புகிறவர்களுக்கு அந்நியத்துணி பகிஷ்காரம் 10 பிரதிகளும் அனுப்பப்படும்.

### பௌண்டன் பேனாவின் சரித்திரம்

[ஆசிரியர் வி. ஆர். முத்து கருப்பன் செட்டியார், காரைக்குடி; விலை இரண்டு அணா.]

ஒரு பௌண்டன் பேனா தன் சுய சரித்திரத்தைச் சொல்வதாக இந்நூலில் எழுதப்பட்டிருக்கிறது. ஆங்கில மொழியில் உள்ள இந்நூலில் நகைச்சுவை நிரம்பியிருக்கிறது.

### கல்பதரு

[பத்திராதிபரும் பிரசுரிப்பவரும்: ஸ்ரீமான் கி. பி. சேஷாத்திரி ஐயங்கார், 64 இராமசாமித் தெரு, சென்னை.]

இந்த மாதப் பத்திரிகை, சில மாதங்களாக நின்றிருந்து, இப்பொழுது மறுபடியும் தலையெடுத்திருக்கிறது. இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கும் ஜூலை மாசத்துப் பத்திரிகையில் பல அரிய வியாசங்கள் எழுதப்பட் டிருக்கின்றன. முதலில் காணப்படும் லட்சுமியின் திரு அகவல் நன்றாயிருக்கிறது. இதன் வருஷ சந்தா தபாற்கூலி யுள்பட மூன்று ரூபாய்.

### ஆப்கானி ஸ்தானமும் பசுக்கொலையும்

ஆப்கானி ஸ்தானத்தைச் சேர்ந்த பிரதம மதகுருவும் உலமாக்களும் சேர்ந்து பசுக்கொலை கூடாதென்று ஒரு பத்வா வெளியிட் டிருக்கின்றனர். இப்பத்வாவை யொட்டி ஆப்கன் அமீர் கீழ்வரும் கட்டளையை ஆப்கன் தேசமக்களுக்கும் ஊழியர்களுக்கும் விடுத்துள்ளார்:—

மேற்கூறிய பத்வாவை யொட்டி பசுப் பலிக்குப் பதிலாக ஆட்டுப் பலி ஏற்றுக் கொள்ளக் கூடியதாயிருக்கிறது. இப்பத்வாவை யொட்டி நம் நாட்டில் பசுக்கொலை அடியோடு நிறுத்தப்பட வேண்டும். பசுக்கொலையை நிறுத்துவதனால் இருவித நன்மைகள் இருக்கின்றன. கிலாபத் விஷயத்தில் இந்தியாவிலுள்ள இந்துக்களும் சேர்ந்துழைக்கின்றார்களாகையால்பசுக்கொலையை நிறுத்திவிடுவதனால் அவர்களுக்கும் நமக்கும் இன்னுமதிகமான அந்நியோந்யம்ஏற்படும். பசுக்கொலை இல்லாதிருப்பதனால் பொருளாதார விஷயமாகவும்நன்மைஏற்படும். இவ்விரு முக்கிய நன்மைகளை உத்தேசித்து பசுக்கொலை நிறுத்தப்பட வேண்டும்.

### யுத்தகளத்தில் துருக்கிய மாதர்கள்

யுத்த களங்களில் இருக்கும் இராணுவ வீரர்களுக்கு வேண்டிய யுத்த சாமான்களை எடுத்துக் கொண்டு போய்க் கொடுக்கும் வேலையில் இருபதாயிரம் துருக்கிய ஸ்திரீகள் ஈடுபட்டிருக்கிறார்களென்றும் இவர்கள் தாங்கள் செய்யும் வேலைக்கு ஒருவித கைம்மாறும் கருதுவதில்லையென்றும் தங்கள் உயிர்வாழ்க்கைக்காகச் சின்னேரம் வேறு தொழில்களில் ஈடுபட்டு மற்றக் காலத்தை இராணுவவீரர்களுக்கு உதவி புரிவதிலேயே செலவழித்து வருகிறார்களென்றும் அவர்கள் பளுவானமூட்டைகளைத் தோள்களின் மீது மிருகங்களைப் போல் தூக்கிக் கொண்டு அநேக மைல் தூரம் கால் நடையாகவே போகிறார்களென்றும் ஒரு பத்திரிகை கூறுகிறது.

## நவசக்தியின்

### சந்தா விவரம்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| வருட சந்தா | ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா | ... | 3 | 0 |
| வெளி நாடு-வருட சந்தா | ... | 6 | 0 |

### விளம்பர விகிதம்.

| | | | |
|---|---|---|---|
| கலம் 1-க்கு வாரம் 1-க்கு | ... | 7 | 0 |
| சில்லரை விளம்பரம் 1-அங். | ... | 0 | 8 |

நீண்டகாலம் விளம்பரஞ் செய்வோர் நேரே எங்கட்கு எழுதவும்.

மானேஜர்
"நவசக்தி"
இராயப்பேட்டை, சென்னை.

